

# வரதன்

(இளைஞர்க்கேற்ற இனிய கதை)



பேராசிரியர் மயிலை சிவமுத்து

மாணவர் மன்றம்
சென்னை - 1.

# மா ர து ன்

அல்லது

# வழி தப்பிய சிறுவன்

பேராசிரியர் மயிலை. சிவமுத்து

மாணவர் மன்ற வெளியீடு
17, இரத்தின முதலி தெரு, சென்னை-1

# பதிப்புரை

'வரதன் அல்லது வழிதப்பிய சிறுவன்' என்னும் இளைஞர்கட்கு ஏற்ற இந் நூல் தமிழ் நெறிக்காவலர் பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்களால் எழுதப்பட்டதாகும்.

மேல் நாட்டினர் அறிவு ஆற்றல்களிலும் விஞ்ஞானப் புதுமைகளிலும் சிறந்து விளங்குதல் போலவே காலத்துக் கேற்ற சுவையான நூல்கள், சிறு கதைகள், முதலிய வற்றை எழுதி வெளியிடுவதிலும் தலைசிறந்து விளங்கு கின்றனர். வாழ்க்கையில் நடைபெறும் சிறு சிறு நிகழ்ச்சி களையும் சுவைபடக் கதைகளாகப் புனைந்து அவற்றின் மூலம் பல அரிய படிப்பினைகளை இளைஞர்கள் மனத்தில் பதியவைப்பதில் அவர்கள் நமக்கு வழிகாட்டிகளாக உள் ளனர். அத்தகைய சிறந்த நூல்கள் பலவற்றை இன்று தமிழில் மொழி பெயர்த்து வெளியிடக்காண்கிறோம்.

நம் பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்கள் மேல் நாட்டினர் கையாளும் அம்முறையைப் பின்பற்றித் தாமே சொந்தமாக எழுதவேண்டும் என்ற பேரவாவினால் முப்ப தாண்டுகட்கு முன்பே சிறந்தபல சிறுகதைகளைப் புதுமை யாகஎழுதினார். அவற்றுள் சிறந்த ஒரு நூல் இது.

குழந்தைகள் மீது கொண்டுள்ள பேரன்பினால் அவர்களை அலங்கரித்துப் பொன்னாலும் மணியாலும் செய்யப்பட்ட பலவித அணிகலன்களைப் பூட்டிப் பள்ளிக்கு அனுப்புவது நம் நாட்டுத் தாய்மார்களின் இயல்பு. அது எவ்வளவு துன்பத்திற்குக் காரணமாகிறது என்பதையும், குழந்தைகளிடம் உள்ள பராக்குப் பார்க்கும் குணம் எத்தகைய கேட்டிற்குக் காரணமாய் அமைந்துவிடுகிறது என்பதையும் இச்சிறு கதை நன்கு விளக்குகிறது.

சிறு குழந்தைகள் காணாமல் போவதும், பிறகு கண்டு பிடிப்பதும் பலரும் அறிந்தவை என நினைக்கிறேன். ஆனாலும் அதனையே தம் கதையின் கருப்பொருளாகக் கொண்டு உள்ளத்தை உருக்கக்கூடிய வகையில் இக்கதையை உருவாக்கியுள்ள ஆசிரியர் அவர்களின் அநுபவ அறிவும் கற்பனைத் திறமையும் கதை செல்லும் போக்கும் இக்கால எழுத்தாளர் உலகத்திற்கு மிகவும் பயன்படுவனவாகும்.

இக்கதை முப்பதாண்டுகட்கு முன் எழுதப்பட்டது. ஆகையால் அந்நாளைய பழக்க வழக்கங்கள், சென்னைச் சூழல், மாணவர் இயல்பு, ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. இக்காலச் சூழ்நிலைக்குச் சில புதுமையாகக் காணப்பட்டாலும் கதையின் கருப்பொருள் இக்கால இளைஞர்கட்கும் பெற்றோர்க்கும் நல்ல படிப்பினை யூட்டுவதாகவே உள்ளது.

இச்சிறந்த கதையை மாணவர் மன்ற வெளியீடாக வெளியிடுவதில் நாங்கள் பெருமகிழ்ச்சி அடைகின்றோம். இதனை மன்றச் சார்பில் வெளியிட்டுக் கொள்ள மனம் உவந்து உரிமை வழங்கிய பேராசிரியர் அவர்கட்கு எங்கள் உளமார்ந்த நன்றியையும் வணக்கத்தையும் அறிவித்துக் கொள்கின்றோம்.

சென்னை
5-6-60

இங்ஙனம்,
கோ. வில்வபதி.

# வரதன்

அல்லது

# வழி தப்பிய சிறுவன்

—O—

## 1. வரதன் வரலாறு

வரதனுக்குப் பராக்குப் பார்ப்பதில் விருப்பம் அதிகம். அவன் ஓர் அப்பக் கடையைக் கண்டுவிட்டால் அரை மணி நேரம் அங்கேயே நின்று விடுவான். பெண்கள் கோலம் போடுதல், குதிரை கொள் தின்னுதல், பால்காரன் பால்கறத்தல், கிழவிகள் வறட்டி தட்டுதல் முதலியன யாவும் வரதனுக்கு மிக்க வியப்பாகவே இருக்கும். பாடசாலையில்கூட அவன் பராக்குப் பார்த்த வண்ணம் இருப்பான். தெருவில் இரண்டு பேர் பேசிக்கொண்டிருந்தாலும் வரதன், அவர்கள் வாய் பார்த்து நிற்க விரும்புவான்.

வரதன் தந்தையின் பெயர் **தாமோதரப் பிள்ளை.** அவர் சிறுவயதில் நான்காம் வகுப்புக்குமேல் படிக்கவில்லை. ஆனாலும் அவர் எப்படியோ ஒரு சிறிய அலுவலகத்தில் மாதம் எழுபத்தைந்து ரூபா சம்பளம் பெற்று வந்தார். அவருக்கு வரதனையன்றி வேறு குழந்தைகள் இல்லை. ஆதலால் அவர், தாம் அடையாத பெருமைகளையெல்லாம் தம் மகன் அடையவேண்டுமென எண்ணினார்.

வரதன் எவ்விதமேனும் பீ. ஏ., எம். ஏ., பட்டம் பெற்றுப்பெரிய பதவியில் அமரவேண்டுமென அவர் எப்போதும் கடவுளை வேண்டிவருவார்.

வரதனுக்கு வயது ஏழே இருக்கும். அவன், தன் வீட்டிற்குச் சிறிது தூரத்தில் உள்ள ஒரு சிறு பள்ளியில் மூன்றும் வகுப்பில் படித்து வந்தான். வரதன், வீட்டில் இருப்பதைவிடப் பள்ளிக்குச் செல்வதையே சிறந்ததாக எண்ணினான். ஏனென்றால், அவன் தந்தை அவனைச் சிறிதும் விளையாட விடமாட்டார். தம் மகன் எந்நேரமும் புத்தகமுங் கையுமாகவே இருக்க அவர் விரும்புவார்.

வரதன் சுவடியிலிருந்து எதையுங் கற்க விரும்பவில்லை; தான் அறிந்துகொள்ள வேண்டுவன யாவும் தெருவிலும், தோட்டங்களிலும், மற்றுமுள்ள இடங்களிலுமே இருப்பதாக அவன் எண்ணினான். ஆனால், தன் தந்தையின் கோபத்திற்கு அஞ்சி அவன், விடுமுறை நாட்களில்கூட வெளியே காலெடுத்து வைப்பதில்லை.

வரதன் காலையில் எழுந்து புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு ஒரு மூலையில் அமர்வான். அவன், தனக்கு நன்றாகத் தெரிந்த பழைய பாடங்களை உரத்த குரலெடுத்து இசை கூட்டி வாசிப்பான்; பின்னர்ப் புதிய பாடங்களைச் சிறிது நேரம் 'மொண-மொண' வென்று மனத்திற்குள் பிழைபடக் குளறி வழிவான்; முடிவில் புத்தகத்தால் முகத்தை ஒரு புறமாக மறைத்துக்கொண்டு பராக்குப் பார்க்க விரும்புவான். தன் தலையைச் சாய்த்துப் பார்க்கும் காகத்தைக் கண்டு அவன் சிறிது நேரம்

வரதன் எவ்விதமேனும் பீ. ஏ., எம். ஏ., பட்டம் பெற்றுப்பெரிய பதவியில் அமரவேண்டுமென அவர் எப்போதும் கடவுளை வேண்டிவருவார்.

வரதனுக்கு வயது ஏழே இருக்கும். அவன், தன் வீட்டிற்குச் சிறிது தூரத்தில் உள்ள ஒரு சிறு பள்ளியில் மூன்றும் வகுப்பில் படித்து வந்தான். வரதன், வீட்டில் இருப்பதைவிடப் பள்ளிக்குச் செல்வதையே சிறந்ததாக எண்ணினான். ஏனென்றால், அவன் தந்தை அவனைச் சிறிதும் விளையாட விடமாட்டார். தம் மகன் எந்நேரமும் புத்தகமுங் கையுமாகவே இருக்க அவர் விரும்புவார்.

வரதன் சுவடியிலிருந்து எதையுங் கற்க விரும்பவில்லை; தான் அறிந்துகொள்ள வேண்டுவன யாவும் தெருவிலும், தோட்டங்களிலும், மற்றுமுள்ள இடங்களிலுமே இருப்பதாக அவன் எண்ணினான். ஆனால், தன் தந்தையின் கோபத்திற்கு அஞ்சி அவன், விடுமுறை நாட்களில்கூட வெளியே காலெடுத்து வைப்பதில்லை.

வரதன் காலையில் எழுந்து புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு ஒரு மூலையில் அமர்வான். அவன், தனக்கு நன்றாகத் தெரிந்த பழைய பாடங்களை உரத்த குரலெடுத்து இசை கூட்டி வாசிப்பான்; பின்னர்ப் புதிய பாடங்களைச் சிறிது நேரம் 'மொண-மொண' வென்று மனத்திற்குள் பிழைபடக் குளறி வழிவான்; முடிவில் புத்தகத்தால் முகத்தை ஒரு புறமாக மறைத்துக்கொண்டு பராக்குப் பார்க்க விரும்புவான். தன் தலையைச் சாய்த்துப் பார்க்கும் காகத்தைக் கண்டு அவன் சிறிது நேரம்

மலைந்திருப்பான்; பின்னர், தத்தித் தத்தி இரை தேடும் குருவியினைக் கூர்ந்து நோக்குவான்; தன் முன்னங் காலினை நாவினால் நக்கி முகந்துடைத்துக் கொள்ளும் பூனையின் செயலைக் கண்டு வியப்பான். அப்போது அவன் தந்தை, 'அடே வரதா, என்ன செய்கின்றாய்?' என்று உரத்த குரலெடுத்து வினவுவார். உடனே வரதன் தன் பழைய பாடங்களில் ஏதேனும் ஒரு பகுதியைக் குருட்டுப் பாடமாகப் புத்தகத்தைச் சரிவரப் பாராமலேயே படிக்க ஆரம்பிப்பான்.

வரதன் அன்னையின் பெயர் **குமுதவல்லி**. அவளுக்குத் தன் மகன்மீது அளவில்லா அன்பு. தன் மகன் சிறந்த செல்வம் பெற்றவர் குழந்தைபோல் உயர்ந்த ஆடை ஆபரணங்களுடன் உலாவவேண்டும் என்பது அவள் எண்ணம். அதனால் அவள், தன் கணவன் கொண்டு வரும் சொற்ப ஊதியத்தில் எவ்விதமேனும் மாதந் தோறும் மிச்சம் பிடித்துத் தன் மகனைப் பட்டாடைகளாலும் பொன்னணிகளாலும் அவ்வப்போது அலங்கரித்து அழகு பார்ப்பாள்; அவனுக்கு நாள்தோறும் தலைவாரிப் பூ முடித்து மகிழ்வாள்; அவன் முகத்தில் மாவினைப் பூசிக் கண்களுக்கு மைதீட்டி நெற்றியில் சாந்திட்டு, 'என் கண்ணே, மணியே,' என்று கூறிக் களிப்படைவாள்.

வரதன் வீட்டுக்கு அடுத்த வீட்டில் **முருகன்** என்னும் சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் வரதனினும் இரண்டு ஆண்டுகள் மூத்தவன். அவன் நான்காம் வகுப்பில் படித்து வந்தான். அவனுக்கு இரண்டு தமயன்மார்கள் உண்டு. அவர்களுள் இளையவன் பெயர் **கந்தன்**.

அவனுக்கு மூத்தவன் பெயர் **சுந்தரன்.** அவர்கள் தந்தை இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு இறந்து விட்டார். அவர், ஒரு வீட்டினை யன்றி வேறு ஒன்றையும் வைத்துச் செல்லவில்லை. எனினும் முருகன் தமயன்மார்கள் உயர்நிலைப் பள்ளியிலும், கல்லூரியிலும் எவ்விதமோ சம்பளமின்றிக் கல்வி கற்று வந்தனர். இவர்கள் கூட்டுறவிலேயே தாமோதரப் பிள்ளையும், தம் மகன் வரதனைப் பி. ஏ. வகுப்பு வரையில் எப்பாடுபட்டேனும் படிக்க வைக்க வேண்டுமென்று எண்ணினர்.

முதன் முதல், தாமோதரப்பிள்ளை, தம் மகன் வரதனைத் தாமே பள்ளிக்கு அழைத்துச் சென்றார். நாள் செல்லச் செல்ல வரதன், தன் நண்பன் முருகனோடு பள்ளிக்குச் செல்வதும், வீடு திரும்புவதுமாக இருந்தான். ஆதலால், வரதனும் முருகனும், நாள்தோறும் பள்ளி துவங்கும் நேரத்துக்கு ஒரு மணி நேரம் முன்னதாகவே, தங்கள் வீட்டினின்றும் புறப்பட்டு விடுவார்கள். அவர்கள் இருவரும், தங்கள் தலையின் மீது பலகை புத்தகங்களை வைத்துக்கொண்டு, மெதுவாக ஆமைபோல் நகர்ந்து செல்வார்கள். அவர்கள் அவ்விதம் செல்லும் போது, வழியில் கோலி விளையாடும் சிறுவர்களைச் சிறிது நேரம் கண்டு மகிழ்வார்கள்; ஒருவரோடொருவர் சண்டையிட்டுத் தெருக் குழாயில் நீர் பிடிக்கும் ஏழை மக்கள் நிலையினை வியந்து பார்ப்பார்கள்; தெருவில் இரை தேடும் கோழிகளின் சண்டையினைக் கூர்ந்து நோக்குவார்கள்; வாயிலின் புறம் நின்று குரைக்கும் நாயின் குரல் கேட்டு அஞ்சி விரைந்து செல்வார்கள். இவ்விதம் அவர்கள் பாடசாலைக்கு அருகில் வந்ததும், தம்

பெற்றோர் தந்த காசினைக் கொண்டு அங்குள்ள கடைக்குச் செல்வார்கள்; தமக்கு வேண்டிய தின்பண்டங்களை வாங்கித் தம் சட்டைப் பைக்குள் போட்டுக்கொண்டு சிறிது சிறிதாகத் தின்றவண்ணம் பாடசாலைக்குச் செல்வார்கள்.

---

## 2. விளையாட்டே வினையானது

வாசுவும் முருகனும் ஒருநாள் பழக்கம்போல் கல்விச் சாலையை அடைந்தனர். அப்போது அந்தக் கல்விச் சாலையானது இவர்கட்கு முற்றிலும் புதுமையாகத் தோன்றியது. அன்று திங்கட்கிழமையாதலால், இவர்கள் அதற்குமுன் இரண்டு நாட்கள் பள்ளிக்குச் செல்லவில்லை. அவ்விரு நாட்களில் அந்தப் பள்ளியில் பல வேலைகள் நடைபெற்றிருந்தன. அடுத்தவாரம் அங்கு அந்த மாவட்டக் கல்வித் துறைத் தலைவர் வந்து அந்தப் பள்ளியைப் பார்வையிடப் போகின்றமையால், அப்பாடசாலைக் கட்டடம் முழுவதும் வெள்ளையடிக்கப் பெற்றும், இடையிடையே மஞ்சள், சிவப்பு முதலிய வண்ணங்கள் பூசப் பெற்றும் இருந்தது. அங்குள்ள மரத்தூண்களும், கதவு, பலகணி முதலியவைகளும், பச்சை நீலம் முதலிய நிறங்களுடன் விளங்கின. பள்ளிக்கு வெளிப்புறத்தே வெண்மணல் பரப்பப்பட்டிருந்தது. பிள்ளைகள் அம்மணலில் விழுந்து புரண்டு, ஒருவர்மேல் மற்றொருவர் மண்ணை வாரிப்போட்டு, 'ஓ' வென்று இரைச்சலிட்டுக்கொண்டு இருந்தனர்.

இவைகளையெல்லாம் கண்ட வரதன், ஆச்சரியத்துடன் அங்கே சிறிதுநேரம் நின்றிருந்தான். பிறகு, அவனுக்கும் முருகனுக்கும் பேச்சு நிகழ்ந்தது.

வரதன்—முருகா ! இன்று நமது பள்ளியில் என்ன கொண்டாட்டம் ?

முருகன்—ஓ, உனக்கு ஒன்றும் தெரியாதா ? நமது பாடசாலையில் அடுத்தவாரம் கல்வித் துறைத் தலைவர் வரப்போகின்றார்.

வரதன்—அப்படியா ! ஆனால் நான் அன்று பட்டுச் சட்டையும், சரிகைத் தொப்பியும் போட்டுக் கொண்டு வருவேன். முருகா, நீ என்ன சட்டை அணிந்துவரப் போகின்றாய் ?

முருகன்—அவ்வளவு உயர்ந்த சட்டைக்கு நான் எங்கேயடா போவேன்? என் சிறிய அண்ணாவின் கறுப்புக் கம்பளிச் சட்டையைத்தான் நான் போட்டுக் கொண்டு வரவேண்டும்.

வரதன்—ஓ, கம்பளிச் சட்டையா ? அது 'சொற சொற'வென்று இருக்கும். அன்றியும், அது உன் சிறிய அண்ணாவின் சட்டை ; அதை நீ போட்டுக் கொண்டால், குடுகுடுப்பைக் காரனைப்போல் இருப்பாய்.

முருகன்—அடே போடா. இதிலெல்லாம் என்னடா இருக்கின்றது ? உன் சட்டையைப் பார்த்துத்தான் உபாத்தியாயர் உன்னை மேல்வகுப்புக்கு மாற்றப் போகிறாரோ ? ஆள் அழகாய் இருந்தால் போதுமா ? எதற்கும் கல்விதானேயடா அவசியம் ?

வரதன்—ஆனால், நீ படிப்பில் புலியோ ?

முருகன்—ஏனடா அதிகமாகப் பேசுகின்றாய் ? நான் என்னைப் 'புலி' என்று சொல்லிக் கொண்டேனா ? ஆனால், நான் உன்னைப்போல் அடிக்கடி உபாத்தியாயரிடம் அடிப்பட்டதில்லை ; பாடம் தெரியாமல் விழித்ததும் இல்லை.

வரதன்—ஆனால் உங்கள் பெரிய அண்ணா உன்னைத் தூணில் கட்டி உதைப்பார்.

முருகன்—ஓ ! நீ உங்கள் அப்பாவிடம் என்றும் உதைப்பட்டதே யில்லையோ ? அது போகட்டும் வரதா, அன்று உன்னை ஒரு சோம்பேறிப் பையன் உதைக்க வந்தானே—அப்படி நான் யாரிடமேனும் உதைபட்டேனா ?

வரதனை ஒரு சோம்பேறி உதைக்க வந்தது உண்மை. அந்தச் சோம்பேறிச் சிறுவன் ஒருநாள் தெருவில் கோலி விளையாடிக்கொண்டிருந்தான். அவ்வழியாக வந்த வரதன் அக்கோலியினைக் காலால் உதைத்துத் தள்ளினான். அதனால் அந்தச் சோம்பேறி, வரதனை அடிப்பதற்கு வந்தான். ஆனால் வரதன், வேகமாக ஓடித் தன் வீட்டில் நுழைந்து கொண்டான்.

இந்தச் செய்தியை அப்போது முருகன் சொல்லியதால் வரதனுக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது. இதைப்போன்ற ஒன்றை முருகனுக்கு நினைப்பூட்டி அவன் வாயை அடக்க வரதன் முயன்றான். அவ்வாறு யாதும் அகப்படவில்லை.

முருகன் சிறிது பருத்திருப்பான். அதனால் அவன் மேல் விரோதங்கொண்ட ஒருவன் அவனை ஒரு நாள் 'அடே குண்டு பெருச்சாளி' என அழைத்தான். அது வரதனுக்கு நினைவு வந்தது. ஆதலால் அவன், அப் பெயரைச் சொல்லி அவனைக் கேலி செய்தான். அருகே இருந்த சிறுவர்கள் அதைக் கேட்டுக் கை கொட்டி நகைத்தார்கள். அதனால் முருகனுக்குக் கோபம் மிகுதி யும் வந்து விட்டது. அவன் உடனே வரதனைப் பிடித்து இழுத்துக் குனியவைத்து, முதுகில் 'கும் கும்' என்று மூன்று முறை குத்தினன். அப்போது வரதனுக்கு, அழுகையுங் கோபமுங் கலந்து வந்தன. எனினும், அவன் என் செய்வான்? முருகனே வயதில் மூத்தவன்; அன்றி யும் வலிமை உடையவன். வரதனே வயதில் சிறியவன்; மெலிந்த உடலினன். எனினும் வரதன் பழிக்குப் பழி வாங்கவே எண்ணினன். ஆதலால் அவன், தனக்கு அருகே இருந்த ஒரு கல்லினைக் கையாலெடுத்து முருகனைக் குறிவைத்து ஓங்கி எறிந்தான்.

நல்லகாலம்! அது சிறிதே தவறியது. அன்றேல் முருகன் மண்டை பிளந்தேயிருக்கும். ஆதலால் முரு கனுக்கு மேலுங் கோபம் அதிகரித்தது. அவன் வரதனை அடிப்பதற்கு அருகே வந்தான். தன் எண்ணம் சிறிதும் நிறை வேறாததால் வரதனுக்கும் அப்போது கோபம் மிகுந்திருந்தது. ஆதலால், முருகன் அருகே வந்ததும் இருவரும் சண்டை பிடித்தனர். முதலில் வரதன், முரு கன் தலை மயிரைப் பிடித்துக் கொண்டான்; உடனே முருகன், வரதன் கழுத்தில் கையை வைத்து அழுத்தி னன். நிமிர முடியாது குனிந்த வண்ணம் இருந்த வரத னுக்கு அப்போது இன்னது செய்வதென்று தோன்ற

வில்லை. ஆதலால், அவன் முருகன் முழங்காலினைப் பிடித்துக் கடிக்க முயன்றான். உடனே அருகேயிருந்த சிறுவர் சிலர் அவ்விருவரையும் விலக்கி அச்சண்டையினை அதோடு நிறுத்தி விட்டனர். பின்னர், அவ்விருவருக்கும் சிறிது நேரம் வாய்ச் சண்டை நடந்தது.

'அடே, தடிமுருகா, நீ வீட்டுக்கு வாடா; நான் என் பெரிய அண்ணாவிடம் சொல்லி உனக்கு நல்ல உதை வாங்கி வைக்கிறேன்' என்றான் வரதன்.

'அடே போடா, கரிவரதா, இரு-இரு; நீ அடித்ததை நான் தலைமை ஆசிரியரிடம் சொல்லி உனக்குப் பிரப்பம்பழம் வாங்கிக் கொடுக்கின்றேன்' என்றான் முருகன்.

பின்னர் மணி அடித்தது. பிள்ளைகள் அனைவரும் தத்தம் வகுப்பினை அடைந்தனர். பாடசாலையின் உட்புறம் மிக அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அநேக நேர்த்தியான படங்கள் ஆங்காங்கே மாட்டப்பட்டிருந்தன. காகிதத்தாலும் களிமண்ணாலும் கப்பல், மைக்கூடு, யானை, பூனை முதலியன செய்து ஒருபுறம் வரிசை வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. மற்றொரு புறம் பாடசம்பந்தமான பலவகைத் தானியவகைகள், உலோக வகைகள், பறவைக் கூடு, தேன்கூடு, பட்டுப்பூச்சியின் கூடு முதலியன அழகுபெற அமைக்கப்பட்டிருந்தன.

வரதனுக்கு அன்று அப்பாடசாலை ஒரு பெரிய கண்காட்சிச் சாலையாகவே இருந்திருக்கும். ஆனால், அவன் அப்பொழுது நேர்ந்த சண்டையினால் எதையும் பொருட்படுத்தவில்லை. வகுப்புக்கு வந்த பின்னரும் வரதன், அச்சண்டையைக் குறித்தே சிந்திக்கலானான். அதனால்

அவன் முகம் பெரிதும் வாட்டமடைந்திருந்தது. முருகன் தன்னைக் குனியவைத்து முதுகில் குத்தியதை நினைக்கும்போதெல்லாம் அவன் கண்களில் நீர் ததும்பலாயிற்று. ஆதலால் அவன் அடிக்கடி தன் கண்களைத் துடைத்துக் கொண்டே யிருந்தான். அவன் அருகே யிருந்த சிறுவர்கள், அவன் வருந்துதலைத் தலைமை ஆசிரியரிடம் உரைத்தனர். அந்த ஆசிரியர் வரதனை அருகே அழைத்து அவன் வருந்துவதின் காரணத்தை வினவினர்.

வரதன் அதற்கு விடையளிக்காமல் மேலும் மேலும் விம்மி அழத்தொடங்கினான். அப்போது, அங்கேயிருந்த சிறுவர்களில் ஒருவன், வரதனுக்கும் முருகனுக்கும் நேர்ந்த சண்டையைக் குறித்து விளக்கமாக உரைத்தான்.

சண்டையின் வரலாற்றினை நன்றாக உணர்ந்து கொண்ட அந்த ஆசிரியர் முதலில் முருகனுக்கு மூன்று அடிகள் பிரம்பினால் கொடுத்தனர்; பிறகு வரதனையும் அவ்வாறே தண்டிக்க எண்ணி அவன் அருகே வந்து, கையை நீட்டும்படி கூறினார்.

அப்போது. வரதன், தன்கையை நீட்டாமலேயே கழுத்தைச் சாய்த்துக் கொண்டும், முகத்தைச் சுளித்துக் கொண்டும் 'சார், இனிமேல் செய்யவில்லை; இனிமேல் செய்யவில்லை' என்று சொல்லிக்கொண்டே நெடுநேரம் செல்லப்பிள்ளைபோல் அவரிடம் கொஞ்சலாயினான்.

அப்போது அந்த ஆசிரியர் அவனைத் தம் கண்களால் உருத்துநோக்கி, 'அடே வரதா, நீ இப்போது உன் கையை நீட்டப்போகின்றாயா—அல்லது உன்னைத் தூணில் கட்டி உதைக்கவேண்டுமா?' என்று சொல்லிப் பிரம்பினை உயரத்தூக்கி அவனை அடிக்க முயன்றார்.

அப்போது வரதன், நடுக்கத்தோடு சிறிது கையை நீட்டி மறுபடியும் இழுத்துக் கொண்டான். அதனால் அவ்வடியானது அந்த ஆசிரியர் துடையில் நன்றாக விழுந்தது. உடனே அந்தத் தலைமை ஆசிரியர் மிகுதியும் கோபங்கொண்டு அவன் கைகளுள் ஒன்றைப் பிடித்துக் கொண்டு முதுகின் புறமாக ஓங்கி இரண்டு அடி கொடுத்து மூன்றாவது அடிக்காகப் பிரம்பை ஓங்கினார். அவ்வடியினைப் பொறுக்காத வரதன் பிரம்பினைப் பிடித்துக் கொண்டான். அதனால், அவர் மேலும் கோபங்கொண்டு, அவனுக்குப் 'பளீர்—பளீர்' என்று பல இடங்களில் நான்கைந்து அடிகள் கொடுத்து அவனை விசுப்பலகையின் மீதும் நிற்கவைத்தார்.

அதனால் வரதனுக்குக் கையில், இரண்டிடங்களில் தழும்பேறின. வரதன் அதனைப் பார்த்துப் பார்த்து அழுதவண்ணம் இருந்தான். ஆசிரியரும் அதனை உணர்ந்து, தம் மனத்திற்குள் சிறிது வருந்தினார்; பிறகு முருகனையும் சிறிது கடிந்து அவனையும் நிற்கவைத்தார். முடிவில், வரதனிடம் சென்று அவனுக்குத் தேறுதல் பல சொல்லி அவன் அழுகையை நிறுத்தி, இருவரையும் உட்கார வைத்தார்.

———

## 3. புலிவேடம்

வரதனும் முருகனும் இணை பிரியாத் தோழர்கள்.

எனினும், வரதன் முருகனிடம் அடிக்கடி விளையாட்டாகப் பல பேசுவதுண்டு. அதனால், சில சமயங்களில்

இவ்விருவரும் சண்டையும் போட்டுக் கொள்வார்கள். ஆனால், அச் சண்டை நெடுநாள் நீடித்து நிற்பதில்லை. இவர்கள் சிறிது நேரத்துக்குள் அச் சண்டையினை முற்றும் மறந்து பழமைபோல் நண்பராய் இருப்பர். இவர்கள் இவ்விதம் சண்டையிடுங்காலத்துப் பெரும்பாலும் வரதனே முருகனிடம் முதலில் பேசுவான். ஆனால் அன்று அவன், அவ்வாறு செய்ய விரும்பவில்லை. ஏனெனில், முருகன் வரதனை அன்று நன்றாக உதைத்து விட்டான். ஆசிரியரும் அவனைப் பிரம்பினால் நன்றாக அடித்தார்.

முருகனோ, 'என்றும் அடிபடாத நான் இன்று ஆசிரியரிடம் உதைபட்டதோடு பென்சியின் மீது நிற்கவும் நேர்ந்ததே' என எண்ணி யெண்ணி நெடுநேரம் வருந்தினான். 'வரதன் என்னிடம் வம்பு வளர்த்தமையால் அன்றோ நான் உதைபட நேர்ந்தது! ஆதலால் அவன் என்னிடம் வந்து "நான் இனி அவ்விதம் செய்வதில்லை" என்று பன்முறை மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும்; அன்றேல் நான் அவனிடம் பேசுவதில்லை' என்று முருகன் தன் மனத்திற்குள் முடிவு செய்து கொண்டான்.

வரதனும் முருகனும் ஒருவரோ டொருவர் பேசாமலேயே சிறிது தூரம் சென்றனர். முருகன் தன்னிடம் வலியவந்து பேசுவான் என்று வரதன் நெடுநேரம் எதிர் பார்த்தான். முருகனோ அவனைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. ஆதலால், வரதன் முகம் மிகவும் வாட்டமடைந்தது. முருகனுக்கும் வரதன்மீது அளவு கடந்த ஆசையுண்டு. என்றாலும், அவன் அதனை அச்சமயம் காட்டிக் கொள்ள விரும்பவில்லை.

வரதனும் முருகனும் சிறிது நேரத்திற்குள் தம் தம் வீட்டை யடைந்தனர். வரதன், முருகனுக்கும் தனக்கும் நேர்ந்த சண்டையைக் குறித்தேனும், ஆசிரியர் தம்மை அடித்ததைக் குறித்தேனும் வீட்டில் ஒருவரிடமும் உரைக்கவில்லை. முருகனும் அவ்வாறே அந்த நிகழ்ச்சியை முற்றிலும் மறைத்து விட்டான்.

பகல் உணவு கொண்டதும் வரதனுக்கு முருகன் மீது இருந்த கோபம் சிறிது ஆறிவிட்டது. ஆதலால் அவன், பள்ளிக்குச் செல்ல முருகன் வருகையை ஆவலோடு எதிர்பார்த்திருந்தான். நெடுநேரஞ் சென்றும் அவன் வாராமையால், வரதன் முருகன் வீட்டுக்கு வலியச் சென்றான். முருகன் முன்னரே பள்ளிக்குச் சென்று விட்டதை அறிந்த வரதன் பெரிதும் வாட்டமுற்றான்.

பள்ளிக்குச் செல்லும் வழி வரதனுக்கு நன்றாகத் தெரியும். என்றாலும், அவன் தனியே சென்றதில்லை. முருகன் முன்னரே சென்ற செய்தியை, வரதன் தாய் அறிந்திருந்தால் அவள், தன் மகனைத் தனியே அனுப்ப விரும்பமாட்டாள். ஏனெனில் அவன், தன் கைகளிலும் கால்களிலும் காப்பும் கொலுசும் அணிந்திருந்தான்; இரண்டு பொற்குண்டலங்கள் அவன் இருகாதுகளிலும் 'பள—பள' வென்று மின்னிக் கொண்டிருந்தன; கழுத்தில் பொன்னால் செய்த தாயித்து ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது.

தான் தனியே செல்லவேண்டியிருத்தலை வரதன் தன் தாயினிடம் எவ்விதம் சொல்வான்? அப்போது அவன் அதன் காரணத்தை முதலிலிருந்து முடிவுவரையில்

விளைவாள் அல்லவா? அன்றியும், ஆசிரியர் அடித்தார் என்பதற்காக அவள் சிறிதும் வருந்தமாட்டாள். ஏனெனில் 'அடித்தால்தான் பிள்ளைக்குப் படிப்பு வரும்' என்பது அவள் எண்ணம்.

ஆதலால் அவன், பலகை புத்தகங்களைத் தன் தலையின் மீது வைத்துக்கொண்டு பராக்குப் பார்த்தவண்ணம், பாடசாலை வழிநோக்கித் தனியே மெதுவாகச் சென்று கொண்டிருந்தான். அப்போது புலி வேடத்தின் பறையொலி அவன் காதில் கேட்டது. ஆதலால் அடுத்த தெருவில் புலிவேடக்காரன் ஆடிக்கொண்டிருப்பான் என அவன் எண்ணினான்.

சிறுவர்கள் அனைவரும் புலிவேடம் பார்க்கப் பெரிதும் ஆவல் கொள்வார்கள். அதிலும் வரதனுக்குப் புலி வேடம் பார்ப்பதில் விருப்பம் அதிகம். புலி வேடத்தின் பறையோசை கேட்டதும் அங்குள்ள சிறுவர்கள் சிலர் 'அடே, புலி—புலி' என்று கூவிக்கொண்டு அதனைப் பார்க்க ஓடினார்கள். அது கண்ட வரதனும், அவர்கள் செல்லும் வழி நோக்கி ஓட ஆரம்பித்தான். அன்று முருகன் அருகே இருந்திருந்தால் அவனை அவ்வாறு செல்லவொட்டாமல் தடுத்துப் பாடசாலைக்குஅழைத்துச் சென்றிருப்பான். ஆ! அவன் கெட்ட காலம்! அப்போது அவன் இல்லாமையால் வரதன், தன் பாடசாலையை மறந்தான்; பெற்றோர் சொல்லையும் துறந்தான்; மனம்போன வழியே மகிழ்ந்து ஓடினான்.

சிறிது நேரத்துக்குள் வரதன், புலிவேடக்காரன் ஆடும் இடத்தை அடைந்தான். ஆனால் அவன் அப்போது தான் தன் ஆட்டத்தை ஆடி முடித்து வேறோரிடத்திற்

[illegible] செல்ல ஆரம்பித்தான். அவ்வேடக்காரன் பெயர் பக்காத்சிங் என்பது. அவன் மிகவும் வலுவாளி. குத்துச் சண்டையிலும், கோல் சுழற்றுவதிலும் அவனுக்கு இணை அவனே ஆவான். புலிபோல் ஆடுவதிலும் அவன்பெரிதும் பேர்பெற்றவன். அவன் ஒரு நாள் ஓர் ஆட்டுக் குட்டியின் மீது புலி போல் பாய்ந்து, அதனை வாயில் கவ்விக் கொண்டு, பல ஆட்டங்கள் ஆடினன். அதனல் பொற் பதக்கங்களும், ஆளிமுகத் தோடாக்களும் அவனுக்குப் பலர் பரிசிலாக அளித்திருக்கின்றனர். அவனுக்குச் சீடர்கள் பலர் உண்டு. அவன் புலிவேடம் போட்டுக் கொண்டு வெளியே வரும்போது அச்சீடர்களில் சிலர் கோல் சுழற்றுவார்கள்; சிலர் கத்திவேலை செய்வார்கள்; சிலர் புலியின் வால்போன்றும், சூரிய வட்டம் சந்திர பிறை முதலியன போன்றும் செய்யப்பட்ட மூங்கிற் கழிகளைச் சுமந்து வருவார்கள்; மற்றையோர் ஆரவாரம் செய்துகொண்டு செல்வார்கள்.

புலிவேடக்காரன் அருகில் எங்கேனும் ஆடுவான் என்றும், தான் அதனைக் கண்குளிரக் கண்டு மகிழலாம் என்றும் வரதன் எண்ணினன். ஆனல், அவன் அவ்வாறு புரியாமல், பல சந்துகளின் வழியாக நுழைந்து எங்கோ நீளச் சென்றுகொண்டிருந்தான். அவனைத் தொடர்ந்து சென்ற மக்களின் மிகுதியும், தாரை தப்பட்டைகளின் ஓசையும் வரதன் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்ததால் அவனுக்குப் பாடசாலையின் நினைவு அப்போதும் வர வில்லை. ஆதலால் அவன், அக்கூட்டத்தினரோடு கலந்து செல்லலாயினன்.

அப்புலிவேடக்காரன் பல தெருக்களைக் கடந்து நெடுந்தூரஞ் சென்று, ஓர் அகன்ற வீதியை அடைந்

தான். பின்னர், இரண்டொரு வீடுகளைக் கடந்து சென்று ஒரு செல்வரின் வீட்டை அடைந்து அங்கே புலிபோல் விளையாடினான். அவன் சீடர்களும், கோல் கத்தி முதலியவைகளால் பல அரிய வேலைகள் செய்து காட்டினர். அந்தச் செல்வர் அவனுக்குப் பட்டாடை யும், ஒரு பொற்பதக்கமும் பரிசிலாகத் தந்தார்.

---

## 4. கரிவேடம்

ஆட்டம் முடிந்தது. ஆதலின் அங்குள்ள கூட்டமும் சிறிது சிறிதாகக் கலையலாயிற்று. புலிவேடக்காரன் வேறு பல இடங்களுக்குச் செல்ல எண்ணினான். வரத னுக்கு அப்போதுதான் பாடசாலையின் நினைவு வந்தது. ‘ஆ! நான் முற்றிலும் மறந்தே போனேனே! பாட சாலைக்குச் செல்லவேண்டுமே!’ எனத் தனக்குள் எண் ணிக்கொண்டே அவன் அக் கூட்டத்திலிருந்து விலகி உடனே வெளியே வந்தான்.

வரதன் பராக்குப் பார்த்த இடம் நீண்டு அகன்ற ஒரு பெரிய தெரு. அவன் அந்தத் தெருவுக்கு என்றும் வந்ததே யில்லை. அதலால், அங்கிருந்து வீட்டிற்குப் போகும் வழி அவனுக்குச் சிறிதும் தெரியவராது. புலி வேடத்தின் மீதிருந்த ஆவலால் வரதன் வரும்போது, வழியினைக் குறித்து யாதும் எண்ணிலன். ஆதலால், பாடசாலைக்குச் செல்லக் கருதிய அவன் வழியறியாது விழிக்கலாயினன்.

வரதனுக்குத் தன் வீட்டின் கதவிலக்கமும் தெரு வின் பெயரும் நன்ருகத் தெரியும். அன்றியும், அவனுக் குத் தான் படிக்கும் பாடசாலை முகவரியும் நன்ருகத் தெரியும். ஆதலால், அங்குள்ளோரிடம் இவைகளைக் கூறி வரதன் வழியறிந்து சென்றிருக்கலாம். ஆனுல் அவன், பிறரைப் போய் எவ்வாறு கேட்ப தென எண்ணி ஞன். ஆதலின் அவன், சிறிது நேரம் திகைத்து நின்ருன். பின்னர் அவன், அந்தத் தெருவில் வடக்கு நோக்கி மெல் லச் செல்லாயினுன்.

அன்று தசராப் பண்டிகையின் ஆரும் நாள். ஆதலால் அங்குள்ள கடைகள் பலவும் மிக்க விநோதமாக அலங் கரிக்கப்பட்டிருந்தன. வரதன், இயல்பிலேயே பராக் குப் பார்க்கும் குணம் வாய்ந்தவன். வெறும் வாயை மெல்லும் ஒருவனுக்கு ஒருபிடி அவல் அகப்பட்டால் சொல்லவேண்டுமா ? வேடிக்கை விநோதங்கள் நிறைந்த அந்தப் பெரிய 'தெருவிலே அவன் ஒன்றையும் கவனி யாது எவ்வாறு செல்லுவான் ? அவன் ஒவ்வொரு கடை யாக நின்று நின்று பராக்குப் பார்த்தவண்ணம் மெதுவா கச் சென்று கொண்டிருந்தான்.

வரதன் அந்த நீண்ட தெருவில் நெடுந்தூரம் நடந்து சென்ருன். முடிவில் அவன் நான்கு தெருக்கள் ஒன்ரு கக் கூடும் ஓர் அகன்ற இடத்தினை அடைந்தான். அங்கே வெற்றிலைப் பாக்குக் கடைகளும், மிட்டாய்க் கடை களும், பழக்கடைகளும், மற்றும் பல்வேறு சில்லறைக் கடைகளும் வரிசை வரிசையாக இருந்தன. அன்றியும், அங்கே குரங்காட்டி ஒருவன் ஒரு சிறு வண்டியில் நாயினைக் குதிரைபோல் பூட்டி இரண்டு குரங்குக் குட்டி களை மேன்மகனைகவும், மேன் மகளாகவும் அலங்கரித்து,

2

அவைகளை அவ்வண்டியில் ஏற்றி, அங்குள்ள மக்களுக்கு வேடிக்கை காட்டிக்கொண்டிருந்தான். வரதன் அவ்விடத்தினை அடைந்ததும் அங்கே நெடுநேரம் நின்று அவ்விநோதத்தைப் பார்த்து மகிழ்ந்திருந்தான்.

குரங்காட்டியின் வேடிக்கை முடிந்தது; பகற்பொழுதும் பெரும்பாலும் கழிந்தது. அப்போதுதான் வரதனுக்கு அச்சம் தோன்றியது. 'ஆ! நான் பாடசாலைக்குச் செல்லவேண்டுமே!' என்பான்; 'ஓ—இப்போது மணி நான்கிற்கு மேல் இருக்குமே!' என ஏங்கிநிற்பான்; 'ஐயோ! நான் எப்படி வீடு செல்வேன்!' என்று உள்ளம் வருந்தி நாற்புறமும் சுற்றிப் பார்ப்பான்.

வரதன் இவ்வாறு வருந்திக்கொண் டிருக்கையில் அங்கே கரிவேடக்காரர் இருவர் வந்தனர். அவ்விருவரும் குடிமயக்கத்திலிருந்தனர். ஆதலின் அவர்கள், ஒருவர்மேல் ஒருவர் விழுந்துகொண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்தனர். அவ்விருவரும் கரியும் எண்ணெயும் கலந்து தங்கள் உடம்பு முழுவதும் பூசிக்கொண் டிருந்தனர். அவர்களில் ஒருவன் இடுப்பின் முன்புறத்தில் ஒரு பெரிய மணியினையும், பின்புறத்தில் ஒரு பழைய முறத்தினையும் கட்டிக்கொண் டிருந்தான். அவனை மற்றொருவன் ஓர் உறுதியான தாம்பினால் கட்டித் தன் இடக்கையில் பிடித்துக்கொண்டு மற்றொரு கையில் ஒரு மூங்கிற் கழியினை வைத்துக்கொண் டிருந்தான்.

வரதனுக்குக் கரிவேடக்காரர் என்றால் மிகுதியும் அச்சம். அவர்கள் வருவதைக் கண்டால் வீட்டிற்குள் ஓடி ஒளிந்து கொள்வான்; அல்லது தொலை தூரத்தில்

விரைந்து சென்று விடுவான். ஆனால், அன்று அவர்கள் தனக்கு மிக அருகில் வரும்வரையில் வரதன் அவர்களைக் கவனிக்கவே யில்லை. ஏனெனில், அவன் அப்போது, தன் வீட்டினைக் குறித்து எண்ணிக்கொண்டிருந்தான். அக் கரி வேடக்காரர் அவன் அருகே வந்ததும் 'ஓ' வென்க் கூவி மணியை ஆட்டினர். அப்போதுதான் வரதன் அவர்களைக் கவனித்தான். அவர்கள் கரிவேடக்காரர் என்பதை அறிந்ததும் அவன், உடல் நடுங்கினன். அவ்வேடக்காரர்கள் மிகுதியும் குடித்து அறிவிழந்து இருந்ததினால் அவர்களுள் ஒருவன், அச்சிறுவன் வைத்திருந்த, பலகை புத்தகங்களை வாங்கித் தன் கக்கத்தில் வைத்துக்கொண்டான். மற்றொருவன், அவன் தொப்பியைப் பிடுங்கித் தன் தலையில் அணிந்துகொண்டான். அவர்கள் அவ்விதம் புரியும்போது வரதன் சிறிதும் அழவில்லை. அவன் அச்சத்தால் இன்னது செய்வதென்று அறியாது திகைத்து நின்றான். பின்னர், அக்கரி வேடக்காரர்கள் எங்கோ செல்லலாயினர். அவர்கள், தன் பலகை புத்தகங்களையும், தொப்பியினையும் கொடுத்து விடுவார்கள் என்று எண்ணி வரதன் அவர்களைத் தொடர்ந்து சென்றான். அவன் நெடுந்தூரம் சென்றும் அவர்கள் அச்சிறுவனுக்கு அவைகளைக் கொடுக்கவேயில்லை. ஆதலின் அவன் மிக்க வருத்தத்தோடு திரும்பிவந்து ஒரு மாடிவீட்டின் தெருக்குறட்டின் மீது அமர்ந்து, ஏதேதோ எண்ணிக் கொண்டிருந்தான்.

———

## 5. ஒரு புதியவன்

மாலை மணி ஐந்திருக்கும்; அப்போது வரதனுக்கு அச்சம் அதிகரித்தது. 'ஆ! இந்நேரம் முருகன் தன் வீட்டிற்குச் சென்றிருப்பான். ஐயோ! நான் இன்னும் இங்கே உட்கார்ந்துகொண் டிருக்கிறேனே! என் தாய் தந்தையர் என்னைத் தேடுவார்களே!' என்று தனக்குள் எண்ணிக்கொண்டே வரதன், தான் இருந்த இடத்தை விட்டு எழுந்தான்; 'அந்தப் போக்கிரிகள் என் தொப்பி யையும், பலகை புத்தகங்களையும் பிடுங்கிக் கொண்டார் களே! நான் நாளைக்குப் பலகை புத்தகங்களின்றி எவ் வாறு பள்ளிக்குச் செல்வேன்' எனச் சிறிதுநேரம் வருந் தினன். 'ஆ! இருட்டிவிட்டால் நான் என்ன செய் வேன்! எவ்விதம் வீடு சேர்வேன்! ஓ! கடவுளே! நீயே எனக்குத் துணைசெய்யவேண்டும்' என்று சொல்லி வருந்தி அச்சிறுவன் நாற்புறமும் சுற்றிப் பார்த்தான். வரதனுக்கு வீடு செல்லும் வழி சிறிதும் தெரியவில்லை. ஆதலால் அவன், வடக்கே சிறிது தூரம் சென்றான்; பின்னர் மேற்கே விரைந்து சென்றான்; 'ஓ! இது முற்றி லும் புதிய வழி' என்று கிழக்கே ஓடினான்; அதுவும் சரியான வழியென அவனுக்குத் தோன்றாமையால் முடி வில் தான் வந்தவழியே திரும்பிச் சென்றான்.

வரதன் இவ்விதம் அலைந்துகொண் டிருக்கையில் அவ்வழியில் பல மனிதர்கள் வருவதும் போவதுமாகவே யிருந்தனர். எனினும் அவர்களுள் ஒருவரும், இச்சிறு வன் வழிதெரியாது வருந்துவதைக் கவனிக்கவில்லை. வர தனும் இதை எவரிடமும் சொல்ல விரும்பவில்லை.

மணி ஐந்தரையும் ஆகிவிட்டது. வரதனோ வீடு செல்லும் வழியினை அப்போதும் கண்டறியவில்லை. நடந்து நடந்து அவன் கால்களும் நொந்தன. அச்சமும் துன்பமும் அவன் மனத்தில் அதிகரிக்கலாயின; கண்களில் நீர் ததும்பிற்று; மார்பு 'பட-பட' வென்று அடித்தது. ஆதலால் அவன், அத்தெருவின் ஒருபுறத்தே நின்று விம்மி-விம்மி அழலாயினான்.

அப்போது, சுமார் இருபத்தைந்து வயதுள்ள ஓர் இளைஞன் அவன் அருகே வந்து நின்றான். அவன் மெலிந்த உடலினன்; மாநிறம் வாய்ந்தவன்; குழிந்த கண்ணினன்; குறுகிய நெற்றியினன். அவன் முகம் சிறிது நீண்டிருந்தது. மீசை மிகுதியும் அடர்ந்தில்லை. எனினும் அவன் அதனை அடிக்கடி முறுக்கிவிடுவான். அவன் உதடுகள் சிறிது கறுத்தே காணப்பட்டன. அவன், தன் முன்புறத் தலைமயிரினைக் கத்திரித்துப் பக்க வடுவெடுத்து ஒழுங்குபெற வாரிவிட்டிருந்தான். பின் புறத்தே இருந்த மயிர் முடிச்சு, பல கொண்டை யூசிகளுடன் விளங்கியது. அவன் அணிந்திருந்த ஆடை சுத்தமானதாகவும் மிக்க விலை யுள்ளதாகவும் காணப்பட்டது.

அவன் அருகே வந்ததும் வரதனை உற்று நோக்கினான். வரதன் அந்த இளைஞனைப் பார்த்து மிரள-மிரள விழித்தான். பின்னர் அவன் புன்முறுவல் செய்து அச்சிறுவனைத் தட்டிக்கொடுத்தான். அப்போது வரதன் தேம்பித் தேம்பி அழலாயினான். அதுகண்ட அந்த இளைஞன் தன் சட்டைப் பையில் வைத்திருந்த ஒரு பட்டுக்கைக்குட்டையினை எடுத்து அவன் கண்களைத் துடைத்தான்.

வாலிபன்—தம்பி, நீ ஏன் அழுகின்றாய்? உனக்கு என்ன வேண்டும்?

வரதன்—ஐயா, நான்—வீட்டுக்குப்—போகவேண்டும்.

வாலிபன்—ஓ, அப்படியா! நீ பயப்பட வேண்டாம். நான் அழைத்துச் செல்கின்றேன். தம்பி, உன் வீடு எங்கே இருக்கிறது?

அப்போது வரதன் தன் வீட்டின் முகவரியைக் கூறி அழுதான். உடனே அவன், வரதன் கண்களில் ததும்பும் நீரினைத் துடைத்து, அவன் முதுகில் தட்டிக் கொடுத்து, 'தம்பி, நீ அழவேண்டாம். நான் உன்னை உன் வீட்டுக்கு அழைத்துச் செல்கின்றேன். நீ சிறிதும் அஞ்சாதே' என்று சொல்லி அச் சிறுவனை, அருகே இருந்த ஒரு மிட்டாய்க் கடைக்கு அழைத்துச் சென்றான். வரதன் தந்தை அவனுக்குக் கடையிலிருந்து ஒன்றையும் வாங்கித் தந்ததேயில்லை. அன்றியும், அன்று விழா ஆதலால், அந்த மிட்டாய்க் கடைக்காரன் வைத்திருந்த பலகார வகைகளுக்கு அளவேயில்லை. சில மிட்டாய்கள் பலவிதமான வர்ணங்களுடன் விளங்கின. சில கோபுரங்கள் போலும், மாடமாளிகைகள் போலும் அலங்கரிக்கப் பெற்றிருந்தன. இவைகளையெல்லாம் வரதன், கண்ணினாலும் பார்த்ததேயில்லை. பலவித நிறங்கள் கொண்டு விளங்கும் 'நுக்கல்' என்னும் தின்பண்டத்தை வரதன் நெடுநேரம் பார்த்துக்கொண் டிருந்தான். ஆதலின் அந்த இளைஞன், அவனுக்கு அப்பண்டங்களில் சிலவற்றை வாங்கித் தந்தான்.

வரதன் அவைகளை மிக்க ஆவலோடு வாங்கி அவைகளுள் ஒன்றை உடனே தன் வாயில் போட்டுக் கொள்ள முயன்றான். ஆனால், அது மிகவும் பெரிதாக

வும் கடினமாகவும் இருந்ததால் அவன் அதனைக் கடித்துத் தின்னலாயினன். அப்போதுதான் வரதன் முகத்தில் களை தோன்றியது.

பின்னர் அவ்வாலிபன், வரதனை நோக்கி, 'தம்பி, உனக்கு இன்னும் என்ன வேண்டும் ? சொல்' என்றான்.

அப்போது வரதன் வெள்ளைச் சர்க்கரையினால் மாட மாளிகைகள்போல் செய்து இடையிடையே இரசகுண்டு கள் தொங்கவிடப் பெற்றிருந்த தின்பண்டத்தைச் சுட் டிக்காட்டி, 'ஐயா, எனக்கு அது வேண்டும்' என்று ஆவலுடன் கூறினான்.

உடனே மிட்டாய்க் கடைக்காரன், 'தம்பி, அது விற்பதற்கன்று. நாங்கள் அதை வேடிக்கைக்காக வைத் திருக்கின்றோம்' என்றான்.

அதுகேட்டதும் வரதன் முகம் வாட்டம் மடைந் தது. பின்னர் அவன், தன்னிடமிருந்த நுக்கலைத் தின்று கொண்டே ஏதோ எண்ணினான். அப்போது அவன் வாயில் யாதோ மெதுவான பண்டம் ஒன்று தட்டுப்பட் டது. உடனே அவன் அதனைக் கையினால் எடுத்துப் பார்த்தான். 'ஓ ! இதில் முந்திரிப் பருப்புக் கூட இருக் கின்றது' என்று சொல்லிக் கொண்டு குதித்தான். ஏனெ னில், வரதனுக்கு முந்திரிப்பருப்பின் மேல் விருப்பம் அதிகம்.

அதுகண்ட மிட்டாய்க் கடைக்காரன், 'ஆம் ; தம்பி, நீ இது வரையில் இதனைத் தின்று பார்த்த தில்லையோ ?' என்று புன்முறுவலுடன் வினவினான்.

அப்போது அவ்வாலிபன் சிரித்துக்கொண்டே வர தனைத் தட்டிக்கொடுத்து, 'தம்பி, உனக்கு இன்னும்

என்னவேண்டும் ? சீக்கிரம் சொல் ; நேரமாகின்றது' என்முன்.

'நேரமாகின்றது' என்னும் சொல்லைக் கேட்டதும் வரதன் முகம் மறுபடியும் மாறுதல் அடைந்தது. ஏனெனில், அவனுக்கு வீட்டின் நினைவு வந்துவிட்டது. ஆதலால் அவன், நாற்புறமும் சுற்றிப் பார்த்தான். அப்போது இருட்டும் சமயமாய் இருந்தது. அது கண்ட அச்சிறுவன், கண் கலங்கலாயினன். அவனல் பேசுதற்கும் இயலவில்லை. வரதன் மனநிலை அறிந்த அவ்வாலிபன் அவனை வேறு கேள்விகள் கேட்காமல் தனக்கு விருப்பமான வேறு இரண்டு பொட்டணங்கள் கடைக்காரனிடம் பெற்றுக்கொண்டு அச்சிறுவனைக் கையில் பிடித்தவண்ணம் எங்கோ அழைத்துச் செல்லலாயினன்.

அந்தப் புதிய இளைஞன், தன்னை அழைத்துச் செல்கின்ற இடம் வரதனுக்கு விளங்க வில்லை. ஆதலின் அவன், சிறிது நேரங் கழித்து, அவனை நோக்கி, ஐயா நீங்கள் என்னை எங்கே அழைத்துச் செல்கின்றீர்கள் ?' என வினவினன்.

இளைஞன்—தம்பி, உன் வீட்டுக்குத்தான்—

வரதன்—ஆனல், எங்கள் வீடு உங்களுக்குத் தெரியுமா ?

இளைஞன்—ஆம் ; நன்ருகத் தெரியும்.

இதைக் கேட்டதும் வரதனுக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாகிவிட்டது. ஆதலால் அவன், தன் கையிலிருந்த நுக்கலைத் தின்றுகொண்டே அந்த இளைஞனுடன் சென்முன்.

———

## 6. மோசம் போனான்

உண்மையில் வரதன் மோசமே போனான். அந்த இளைஞன் மிகவும் பொல்லாதவன். அவனிடம் நல்ல குணம் எள்ளளவும் கிடையாது. அவன் மோசம், கொலை, களவு முதலிய எல்லாவற்றிற்கும் துணிந்தவன். அவன் தந்தை, எவ்விதமோ சிறிது பணம் சேர்த்துப் பெரிய மனிதர்போல் வாழ்ந்து வந்தார். அவர் இறந்து ஐந்து ஆண்டுகள்கூட ஆகவில்லை. இதற்குள் அவன், அவர் சேர்த்துவைத்த பொருள்களையெல்லாம் தொலைத்து விட்டான். அவன் பெயர் **தாண்டவன்** என்பது. அவனுக்கு மூத்த சகோதரர் மூவர் இருந்தனர்; அவர்கள் மூவரும் நல்ல காளை வயதிலேயே 'திடும்-திடும்' என இறந்துபோயினர். தாண்டவன் தந்தை அதிலிருந்து பிள்ளைகளையே வெறுக்க ஆரம்பித்தார். எனினும் அவர் இந்த ஒருவன் மீது மட்டும் அளவு கடந்த அன்பினையே வைக்கலாயினார். இவன் ஒருவனாவது உயிருடன் இருந்தால் போதும் என்றே அவர் எண்ணினார். அதனால் தாண்டவன் மனம்போனபடி ஆடலாயினான்.

மிகச் சிறுவனாக இருக்கும்போதே தாண்டவன், தன் தந்தை அறியாதபடி வீட்டில் உள்ள பொருள்களைத் திருடிக்கொண்டு போய்விடுவான். அவன் சுற்றத்தாரும், நண்பருங்கூட அவனைச் சேர்ப்பதில்லை. அவன் திருட்டுத் தொழிலே அதற்குக் காரணம். அவன் ஒரு முறை சிறைச்சாலைக்குக் கூடப் போய் வந்தவன்.

தன் தந்தை வைத்துச் சென்ற பொருளில் தாண்டவன் ஒரு காசினையேனும் மிகுதியாக வைக்கவில்லை. அவனுக்கு எழுதவோ அன்றிப் படிக்கவோ சிறிதும் தெரியாது. அவன் வேலைசெய்து இதுவரையில் ஒரு காசுகூடச் சம்பாதித்ததில்லை. ஆதலால் அவன், தன் சோற்றுக்கே தாளம் போட வேண்டியவன். அவ்விதம் இருந்தும் அவனிடம் எவ்விதமோ பணம் நடமாடிக் கொண்டே இருக்கும். வரதனைச் சந்தித்த அன்றுகூட அவன், தன் சட்டைப்பையில் நான்கு ரூபாக்களும், சில அணுக்களும் வைத்திருந்தான். அவன் எப்பொழுதும் விலை உயர்ந்த ஆடைகளையே அணிவான். அன்று அவன், தன் விரல்களில் கல்லிழைத்த மோதிரங்கள் அணிந்திருந்தான். பொற்சங்கிலியோடு கூடிய கடிகாரம் ஒன்று அவன் கையில் அழகுடன் விளங்கியது. அவன் மிக இனிமையாகப் பேசும் இயல்பு வாய்ந்தவன். ஆனால் அவன், தன் கொடிய குணத்தைக் காட்டும்போது மிக்க பெரியோர்களும் அஞ்சுவர்.

தாண்டவன் என்னும் அவ்வாலிபனோடு வரதன் நெடுந்தூரம் சென்றான். தான் எவ்விதமேனும் தன் வீட்டை அடையலாம் என்னும் எண்ணத்தால் வரதன் தன் கால் நோயினையும் கருதவில்லை.

இரவு வந்துவிட்டது; தெருக்களினும், கடைகளிலும் விளக்குகள் ஒளிரலாயின. மணி சுமார் ஏழு இருக்கும். அப்போது வரதன் அந்த இளைஞனோடு நடந்துகொண்டேயிருந்தான். அவன் கையிலிருந்த நுக்கலும் ஆகிவிட்டது.

வரதன்—ஐயா, எங்கள் வீடு இன்னும் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது?

தாண்டவன்—ஏன்? தம்பி, உனக்குக் கால் நோகின்றதா?

வரதன்—ஆம்; நோகின்றது.

தாண்டவன்—அப்படியா? நாம் மிக அருகிலேயே வந்துவிட்டோம். இன்னும் கொஞ்சம் தூரம்தான் இருக்கிறது—தம்பி, உன் பெயர் என்ன?

வரதன்—என் பெயர் வரதன்.

தாண்டவன்—நன்று-நன்று அழகான பெயர். நல்லது; தம்பி வரதா, உனக்குப் படிக்கத் தெரியுமா?

தாண்டவன் இதைக் கேட்டதும், வரதனுக்குத் தன் பலகை புத்தகங்களின் நினைவு வந்துவிட்டது. ஆதலால் அவன், அக்கேள்விக்கு விடை யளிக்காமல் மிக்க வருத்தத்தோடு தலைகுனிந்து இருந்தான்.

'தம்பி' வரதா, ஏன் பேசாமல் இருக்கின்றுய்?" என்று வினவிக்கொண்டே தாண்டவன் வரதன் முகத்தை நோக்கினுன்.

அப்போது வரதன் கம்மிய குரலுடன், கண்ணீர் விட்டுக் கொண்டே, 'ஐயா' என் பலகை—புத்தகங்களையும், தொப்பியையும்—இரண்டு—கரிவேடக்காரர்கள்—எடுத்துக்கொண்டு—போய்விட்டார்கள்' என்றுன்.

இதைக் கேட்டதும் தாண்டவன் 'ஆ—அப்படியா! இதை எனக்கு ஏன் முன்னரே சொல்ல வில்லை? இருக்கட்டும்; எப்படியும் நான் அவர்களைக் கண்டுபிடிக்

கின்றேன்' என்று சொல்லிக்கொண்டே சிறிது தூரம் அவனை அழைத்துச் சென்றான்.

பின்னர்த் தாண்டவன், தன் கையிலிருந்த இரண்டு பொட்டணங்களையும் அவிழ்த்தான். அவைகளுள் ஒன்று 'அல்வா' என்னும் இனிய தின்பண்டம்; மற்றொன்று 'பகோடா' என்னும் காரமான பண்டம். அவைகளில் அவன் 'பகோடா'வை முதலில் வரதனிடம் கொடுத்தான். வரதன் அதனைச் சிறிது சிறிதாகத் தின்றுகொண்டு வந்தான். அப்போது தாண்டவன், தன்னிடமிருந்த யாதோ ஒரு மயக்கப் பொடியினை, வரதன் அறியாவண்ணம் அந்த அல்வாவில் கலந்தான்.

பின்னர் அவன் அதனை வரதனிடம் கொடுத்து, 'தம்பி, இதனைத் தின்றுபார்; இது மிகவும் இனிப்பாக இருக்கும்' என்றான்.

வரதன் அதில் சிறிது தின்றதும் 'தூ-தூ' என்று நிலத்தில் உமிழ்ந்தான்.

அப்போது தாண்டவன், 'தம்பி, என்ன உமிழ்கின்றாய்?' என்றான்.

அதற்கு வரதன் 'இந்த அல்வாவில் என்னவோ இருக்கின்றது' என்றான்.

உடனே தாண்டவன் 'தம்பி, அதில் ஏலக்காய் பொடி செய்து போட்டிருப்பார்கள்; வேறொன்றுமில்லை. சாப்பிடு; உன் உடம்பிற்கு நல்லது' என்றான்.

ஆதலால், வரதன் ஒன்றும் சொல்லாமல் மிகுதியைச் சிறிது சிறிதாகத் தின்றுகொண்டே சென்றான்.

சிறிது தூரம் சென்றதும் வரதன் 'ஐயா' இங்கே ஒருவீடும் காணேனே! நீங்கள் என்னை எங்கே அழைத்துச் செல்கின்றீர்கள்' என்றான்.

அதற்குத் தாண்டவன், 'தம்பி, நாம் உன் வீட்டிற்குத் தான் போகின்றோம்' என்றான்.

அப்போது வரதன் 'ஐயா, இது முற்றிலும் புது வழியாய் இருக்கின்றதே!' என்றான்.

உடனே தாண்டவன் 'வரதா, இது புது வழிதான்; இவ்வழியாகச் சென்றால் நாம் சீக்கிரம் வீடு போய்ச்சேர லாம்' என்றான்.

இவ்வாறு தாண்டவன் சொல்லிக் கொண்டிருக்கும் போது வரதன் கண்கள் அவனை அறியாமலேயே மூட லாயின; கால்நடை தளர்ந்தது. அப்போது வரதன், தன் மெதுவான குரலினல் 'ஐயா—எனக்கு மயக்கமாய்—இருக்—கிறது; என்றான்.

உடனே தாண்டவன் 'தம்பி உனக்குத் தூக்கம் வருகிறதா? இதோ நான் உன்னைத் தூக்கித் தோளில் போட்டுக் கொள்கின்றேன்' என்று சொல்லிக் கொண்டே வரதனைத் தன் இருகைகளாலும் தூக்கித் தோளில் சாய்த் துக்கொண்டான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் வரதன் பிணம்போல் ஆயினன். ஆதலால், அவனைத் தோளில் சுமந்து கொண்டு, அவன் நகைகளைக் கழற்றுவதற்குத் தக்க இடம் எங்கு அகப்படும் என்று பார்த்துக்கொண்டே தாண்டவன் நெடுந்தூரம் சென்றான்.

ஏறக்குறைய மணி பத்திருக்கலாம்; அப்போது தாண்டவன் புழல் மாதவரத்திற்குச் செல்லும் வழியில்

இருந்த ஒரு சோலைக்குள் சென்று, அங்கிருந்த ஒரு கல்லின்மீது வரதனைப் படுக்கவைத்து அவன் நகைகளைக் கழற்றிக் கொண்டிருந்தான். மயங்கிக் கிடந்த வரதனுக்குச் சிறிது அறிவு வர அவன் விழித்துப் பார்த்தான்.

'ஐயா, நான் எங்கே இருக்கிறேன்!' என்று ஆச்சரியத்துடன் கேட்டான் வரதன்.

தாண்டவன், வரதன் கேட்டதற்கு விடையளிக்காமல் நகைகளை விரைந்து கழற்றுவதிலேயே கருத்தாக இருந்தான்.

அது கண்ட வரதன் அச்சமுற்று நான்கு புறமும் சுற்றிப் பார்த்தான். எங்கும் மரங்களே அடர்ந்திருந்தன. அதனால், தாண்டவன் திருடனே என்பதை நன்கு அறிந்துகொண்டான் வரதன். ஆதலால் அவன் அச்சமுங் கோபமுங் கொண்டவனாய்க் கண்களில் நீர் ததும்ப அழுகையோடும், ஆத்திரத்தோடும் 'ஓ திருடன்—திருடன்—என் நகைகளைக் கழற்றுகின்றான்' என்று உரத்துக் கூவினான்.

அப்போது தாண்டவன் உருத்துப் பார்த்தான். பின்னர் அவன், 'அடே, இப்போது நீ கூவினால்—இதோ பார்' என்று இடுப்பில் செருகியிருந்த ஒரு நீண்ட கத்தியை எடுத்துக் காட்டினான்.

———

# 7. காயா—பழமா?

நாம் முருகனைக் குறித்து மறந்தேபோனேம் அல்லவா? அவன் அன்று வழக்கம்போல் பகல் உணவு கொண்டு வரதன் வீட்டுக்கு அருகே வந்தான். முருகன் தான் வரதனை அழைத்து போவது வழக்கம். ஆனல், அன்று அவன் அவ்வாறு செய்ய எண்ணவில்லை. ஏனெனில், வரதன்மீது முருகனுக்கு இருந்த கோபம் அப்போது முற்றிலும் நீங்கவில்லை. ஆனல் அவனை என்றும் பிரிந்திருக்க முருகன் விரும்பவில்லை. இன்னும் சில மணி நேரமேனும் வரதனுக்குத் தன் கோபத்தைக் காட்ட வேண்டுமென்று முருகன் எண்ணினன். ஆதலால் அவன், அன்று வரதன் வீட்டில் நுழையாமலேயே பாடசாலைக்குச் செல்ல லாயினன்.

முருகன் என்றும் தனியாகச் சென்றதில்லை. ஆதலால் அன்று அவனுக்கு அவ்வாறு செல்வது மிகவும் துன்பமாகவே இருந்தது. அன்றியும் வரதனும் முருகனும் வழியில் உள்ள ஒவ்வொன்றினையும் பார்த்துக்கொண்டும், அவைகளைக் குறித்துப் பலப் பல பேசிக்கொண்டும் அங்கங்கே நின்று நின்று அடிமேல் அடிவைத்து மிக மெதுவாகப் பாடசாலைக்குச் செல்வார்கள். அன்று ஒன்றியாகச் சென்றதால் முருகன் முன்னதாகவே தங்கள் பள்ளியை அடைந்தான்.

அந்தப் பள்ளிக்கு அருகே சில சிறுவர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களுள் ஒருவன் கண்ணன் ன்பவன். அவனும் வரதன், நண்பர்களுள் ஒருவனே. ஆனல், சில நாட்களாக அவன் வரதனிடம் பேசுவதில்லை. னென்ருல் வரதன், கண்ணன், முருகன் மூவரும்

ஒருநாள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவ்விளை யாட்டு என்ன வென்றால் அவர்கள் ஒவ்வொருவரும் தங் கள் கைகளில் ஒன்றை முதுகின் புறமாக மடக்கி வைத் திருத்தல் வேண்டும். அவர்களுள் யாரேனும் ஒருவன் அவ்வாறு புரிய மறந்துவிட்டால் மற்றொருவன் அவன் முதுகில் ஓங்கிக் குத்துவதே யாகும்.

முதுகின் புறமாகக் கையை மடக்கி வைத்திருக்கக் கண்ணனும், முருகனும் என்றும் மறப்பதே யில்லை. ஆனால் வரதனோ, அவ்வாறு செய்ய மறந்து விடுவான். அதனால், கண்ணனும் முருகனும், வரதன் முதுகில் அடிக் கடி குத்துவார்கள். முருகன் எல்லோரினும் பெரியவனாக இருந்தும் மிகமெதுவாகவே குத்துவான். கண்ணனோ தன் வலிவுகொண்ட மட்டில் ஓங்கி ஓங்கிக் குத்துவான். ஆதலால், வரதனுக்குக் கண்ணனிடம் கோபம் மிகுதி யாக இருந்தது. கண்ணனைப் பழிக்குப்பழி வாங்க வேண்டு மென்று வரதன்எதிர்பார்த்திருந்தான். கண்ணனோ சிறிதும் ஏமாறுவதாக இல்லை. எனினும் ‘எப்போதேனும் சமயம் வாய்க்கும்’ என்று வரதன் கண்ணன் செல்லுமிடமெல் லாம் அவனைத் தொடர்ந்து சென்றுகொண் டிருந்தான். திடீரென்று கண்ணனுக்குத் தன் துணி சிறிது நெகிழ லாயிற்று. அவ்வித சமயங்களில் பிள்ளைகள் ‘அம்பால்’ என்று சொல்லி விடுவார்கள். மறுபடியும் ‘ஜூட்’ என்று சொல்லும் வரையில் ‘அம்பால்’ சொல்லியவனை ஒருவரும் முதுகில் குத்துதல் கூடாது. துணி இடுப்பி னின்றும் அவிழத் தொடங்கியதால் கண்ணன் ‘அம்பால்’ என்று சொல்லிக் கொண்டே தன் துணியைக் கட்ட ஆரம்பித்தான். வரதன் அதற்குச் சிறிதும் உடன்படா மல் அதுதான் சமயம் என்று கண்ணன் முதுகில் ‘கும்-கும்’ என்று ஓங்கி ஓங்கிக் குத்தினான்.

கண்ணன் அதிலிருந்து வரதனிடம் பேசுவதில்லை. அன்றைய மறுநாளே வரதன் கண்ணனிடம் பேசுவ தற்கு வந்தான். கண்ணன் அப்போதும் பேசவில்லை. பிறகு வரதன், 'காயா-பழமா ?' என்றான்; முருகனைத் தூதுவிட்டான்; கடிதம் பல எழுதினன். கண்ணன் எதற்கும் இணங்கவில்லை. ஆதலால் அன்று முதல் கண் ணனும் வரதனும் பகைவராயினர்.

பின்னர் முருகன், அவ்விருவரையும் ஒன்று சேர்க் கப் பெரிதும் முயன்றான். எனினும், அம்முயற்சி வீணு கவே முடிந்தது' முருகா, நீ யார் பக்கம் ?' என்பான் கண்ணன். 'முருகா, நீ கண்ணனிடம் கூடவேண்டாம்' என்பான் வரதன். முருகன் யாது செய்வான் ? அவ னுக்கு இருவரும் நண்பரே. முருகனுக்கு வரதனிடம் விருப்பம் அதிகம். ஆனல், கண்ணனிடம் வீணைகப் பகைத்துக் கொள்ளவும் அவன் விரும்பவில்லை. கண்ண னைப் பார்க்கும்போது அவனுக்கு நியாயம் தோன்றுகின் றது; வரதனை நினைக்கும்போது அவனுக்கு அன்பு தோன்றுகின்றது. ஆதலால், முருகன் 'நான் உங்கள் இருவர் பக்கமும் இருப்பேன்' என்று சொன்னன். ஆனல், நாள் செல்லச்செல்ல முருகன் வரதனிடமே மிகுதியும் அன்பு காட்டினன். ஆதலால், கண்ணனும் முருகனிடம் பெரிதும் பேசுவதில்லை.

இப்போது வரதனுக்கும் முருகனுக்கும் சண்டை யல்லவா ? அவர்கள் அவ்வாறு சண்டையிட்டுக் கொண் டது கண்ணனுக்கு மிகவும் மகிழ்ச்சியையே கொடுத் தது. முருகன் பள்ளியை அடைந்தவுடன் கண்ணன் அவன் அருகே சென்றான்.

கண்ணன்—முருகா, அந்த வரதன் திருட்டுப்பையன் என்று நான் அப்போதே சொல்லவில்லையா ? அவன் உன்னைப் பெரியவன் என்றும் பாராமல் கல்லால் அடித்தானே ! அன்றியும் கடித்தானே ! அவனுக்கு என்ன இறுமாப்பு !

முருகன்—ஆனால், பாவம் ! அவன் அதனால் நம் ஆசிரியரிடம் நன்றாக உதைபட்டான். அன்றியும் நானும் உதைத்தேன்.

கண்ணன்—இவ்வளவுதானா ? ஆனால், நீ வரதனிடம் மறுபடியும் பேசுவாயோ ?

முருகன்—பேசவேண்டியதுதான். உன்னைப்போல், ஒருவனிடம் சண்டை போட்டால் சாகின்றவரையில் பேசாமல் இருப்பதா ? ஆனால், நான் இப்போதே பேச மாட்டேன் ; இன்றைய மாலையோ அல்லது நாளைக்கோ பேசுவேன்.

கண்ணன்—அப்படியானால், நீங்கள் இருவரும் என்றைக்கும் ஒன்றுதான். நான்தான் வேறு ஆகிவிட்டேன்.

முருகன்—கண்ணா, நீ ஏன் அப்படிச் சொல்லுகின்றாய் ? உன்னை யார் பேசவேண்டாம் என்று சொன்னார்கள் ? வரதன் எத்தனையோ முறை உன்னிடம் வலிய வந்து பேசினான். நீதான் அவனைப் புறக்கணித்தாய். வரதன் சிறிது துடுக்குத்தனம் உள்ளவன்தான். ஆனால், மிகவும் நல்லவன். அவன் தன் கையில் எதை வைத்திருந்தாலும் அதைத் தன் நண்பர்களுக்குக் கொடுத்துவிடுவான். வீட்டார் ஏதேனும் தின்பண்டம் தந்தால், அதைக்கூட அவன் அப்படியே எடுத்துவந்து தன் நண்

பர்களுக்குக் கொடுத்துத் தானும் உண்ணுவான். வரதன் நேற்றைய தினம்கூட ஏதோ இரண்டு அதிரசம் கொண்டுவந்தான். அப்போது, அவன் உன்னைக்குறித்து எவ்வளவு வருந்தினன் என்பது உனக்குத் தெரியுமா ?

கண்ணன்—அப்படியா ! வரதன் நல்லவன்தான் ; எனக்கும் எத்தனையோமுறை தின்பண்டங்கள் கொண்டு வந்து கொடுத்திருக்கிறன். அன்றியும், ஒருநாள் நான் என் எழுதுகோலைப் போக்கடித்துவிட்டேன் ; ஆசிரியர் ஏதேனும் எழுதச் சொன்னல் என்ன செய்வது என்று வருந்தினேன். அப்போது வரதன், உடனே தன் புதிய பென்சிலை இரண்டாகக் கத்தியால் துண்டித்து எனக்குக் கொடுத்தான்.

முருகன்—ஆம் ; அவன் எனக்கும் எத்தனையோ முறை புத்தகம், பேனு, பென்சில் முதலியன உதவியிருக்கின்றன். அப்படி யிருக்கும்போது கண்ணு, நீ ஏன் வரதனிடம் பேசமாட்டேன் என்கின்றய் ?

கண்ணன்—முருகா, எனக்கு முன்பு வரதனிடம் கோபம் இருந்தது. இப்பொழுது கொஞ்சமும் இல்லை. ஆனல், இத்தனை நாள் பேசாமல் இருந்து இப்போது திடீரென்று எப்படிப் பேசுவது ? அவனே முதலில் வந்து பேசினல் அப்போது பேசலாம் என்று எண்ணுகின்றேன். ஆனல், அவன் இப்போது என்னைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை.

முருகன்—ஓ ! உன்னிடம் அவன் எத்தனை முறை வலியப் பேசுவான் ? இப்போது நீ தான் முதலில் ப் பேசவேண்டும். நானும் அப்படித்தான் செய் பாகின்றேன்.

கண்ணன்—அதிருக்கட்டும். எங்கே வரதன்? அவன் இதுவரையில் பள்ளிக்கூடம் வரவில்லையே! மணியடிக்கும் நேரம் ஆகிவிட்டதே!

முருகன்—பாவம்! அவன் எனக்காக நெடுநேரம் வீட்டில் காத்துக்கொண்டு இருப்பான். பிறகு மெதுவாக வருவான். அன்றியும், அவன்தான் பராக்குப் பார்ப்பவனுயிற்றே! நான் அருகே யிருந்தால் அவனை அவ்வாறு செய்யவொட்டாமல் தடுப்பேன்.—அவன் நிற்க மாட்டான்; எப்படியும் பாடசாலைக்கு வந்துவிடுவான்.—கண்ணு, இப்போது அவன் என்னைப் பார்த்துவிட்டால் அவனுக்கு என்மீது மிகக் கோபமாய் இருக்கும். நீயும் நானும் ஒன்ருகச் சேர்ந்து கொண்டோம் என்றும், நாம் அவனைத் தனியாக விட்டுவிட்டோம் என்றும் வரதன் எண்ணி வருந்துவான். இன்றையதினம் அவனை நாம் இவ்விதமே அழவைக்க வேண்டும்.

வரதன் இவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கையில் மணியடித்தது. பிள்ளைகள் அனைவரும் பாடசாலைக்குள் சென்றனர்.

---

## யார் உயர்ந்தவர்?

இவர்கள் படித்திருந்த பாடசாலை மிகவும் சிறியது. அங்கே மூன்று உபாத்தியாயர்களுக்கு மேல் இல்லை. அவர்களுள் ஒருவர் தலைமை ஆசிரியர். காலையிலும், பகலிலும் தலைமை ஆசிரியரே எல்லாப் பிள்ளைகளின் பெயரையும் கூப்பிடுவார். வராதவர்களுக்கும் அவரே ஆள்

விட்டு அனுப்புவார். அவ்வாறே அவர் அன்று பகலும் பிள்ளைகளின் பெயரை வரிசைப்படி கூப்பிட்டு வந்தார்.

அப்போது அவர், வரதன் வராமையை அறிந்து முருகனை அழைத்து 'வரதன் எங்கே ?' என்றார்.

அதற்கு முருகன், 'ஐயா, எனக்கு ஒன்றும் தெரியாது' என்றான்.

உடனே அவர், 'யாரேனும் ஒருவனை வரதன் வீட்டிற்கு அனுப்பலாமா ?' என எண்ணினார்.

வரதனைத் தாம் அன்று காலை அடித்தது அவருக்கு அப்போது நினைவிற்கு வந்தது. வரதன், தன் தாய் தந்தையருக்கு மிகவும் செல்லப்பிள்ளை அந்த ஆசிரியருக்கும் தெரியும். ஆதலால் தாம் வரதனை அடித்ததற்காக அவன் பெற்றோர், தம்மீது கோபங்கொண்டிருக்கலாம் எனவும் அவர் எண்ணினார். உடனே அவர், எழுதுகோலைத் தம் வாயருகே வைத்துக்கொண்டு சிறிது நேரம் யோசித்தார்.

அப்போது அங்குள்ள சிறுவர்களும் தத்தமக்குத் தோன்றியவாறு ஒருவருக்கொருவர் மெதுவாகப் பேசிக் கொண்டனர்,

'அடே, வரதன் இன்றைக்கு மட்டம் போட்டு விட்டான்' என்றான் ஒருவன்.

'ஆனால், நாளைக்கு அவனுக்கு நல்ல உதைவிழும்' என்றான் மற்றொருவன்.

'ஐயோ பாவம் ! இன்று காலையில்கூட அவன் உதைபட்டான்' என்றான் வேறொருவன்.

'அடே, இன்று வரதன் ஏன் வரவில்லை—தெரியுமா ? நம் ஆசிரியர் அடித்ததால்தான் வரவில்லை. அதை அவன் வீட்டில் சொல்லிவிட்டிருப்பான்.—'

'அடே, அவன் தகப்பஞர் மிகவும் கோபக்காரர்'

'போடா, அதற்கெல்லாம் நம் ஆசிரியர் சிறிதும் அஞ்சமாட்டார்.

' வரதன் இதை வீட்டில் சொல்லியே இருக்கமாட்டான். அப்படிச் சொன்ஞலும் அவன் தந்தை அவனைத் தான் உதைப்பார்!'

' ஆஞல், வரதன் ஏன் வரவில்லை ?'

' அவனுக்குக் காய்ச்சலோ — தலைநோயோ ?'

' அடே, அதிருக்கட்டும் ; நம் ஆசிரியர் அவனை அழைத்துவர ஏன் ஒருவனையும் அனுப்பவில்லை ?'

' அதுதான் எனக்கும் தெரியவில்லை '.

இவ்விதம் பேசிக் கொண்டிருக்கும்போது அந்த ஆசிரியர் பாடம் துவங்கியதால் அவர்கள் தம் பேச்சினை அவ்வளவோடு நிறுத்திக்கொண்டார்கள்.

அன்று, வரப்போவதில்லை எனக் கூறிச்சென்ற கோபாலனையும், கோவிந்தனையும் அவர்கள் தாய் தந்தையர்கள் உதைத்துப் பாடசாலைக்கு அனுப்பிஞர்கள். அவர்களைத் தலைமை ஆசிரியர் யாதும் கேட்கவில்லை. கோதண்டனும் அவர்கள் எண்ணியபடி கோள் சொல்லவில்லை.

வரதன் பாடசாலைக்கு வராதது முருகனுக்கு முதலில் ஆச்சரியத்தையே விளைவித்தது. தான் முன்னதாக வந்துவிட்டதால் வரதனை அவன் தாயார் தனியே அனுப்பவில்லை என்று முருகன் முடிவுகட்டிஞன்.

பாடசாலை நேரம் முடிந்தது. பிள்ளைகள் அனைவரும் ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டும், ' ஓ '

வென்று இரைந்துகொண்டும் பாடசாலையைவிட்டு வெளியே வந்தனர். முருகன், அன்று தனியாகவே வீடு செல்ல எண்ணினன். ஆனால், அவன் சிறிது தூரம் செல்வதற்குள் கண்ணன் அவனைப் பின் தொடர்ந்தான்.

கண்ணன்—முருகா, நான் வரவேண்டாமா ?

முருகன்—வரவேண்டாம் என்று சொன்னது யார் ? வந்தால் எனக்கும் துணைதான். ஆனால், நீ எவ்வளவு தூரம் வரப்போகிறாய் ? நீ இருப்பது தென்கோடி ; நான் இருப்பது வடகோடி.

கண்ணன்—முருகா, நான் இன்று உன் வீட்டுத் தெருவரையில் வருவேன். ஏனென்றால், நான் என் அத்தை வீட்டுக்குச் செல்லவேண்டும்.

முருகன்—ஓ அப்படியா ? ஆனால் வா ; போகலாம். இன்று வரதன் வராதது எனக்கு மிகவும் துன்பமாகவே யிருக்கின்றது.

கண்ணன்—வரதன் இன்று ஏன் வரவில்லை ?

முருகன்—அதுதான் எனக்கும் தெரியவில்லை. நான் இன்று அவன் வீட்டுக்குப் போகாததினால் அவன் தாயார் அவனை நிறுத்திவிட்டிருக்கலாம்.

கண்ணன்—இருக்கலாம் ; அவன் நம்மைவிடச் சிறியவன்தானே !

முருகன், வரதன் வீட்டிற்குள் முதலில் வேகமாய் நுழைந்தான். ஆனால், இரண்டொரு அடிவைத்ததும் சிறிது தயங்கினன். ஏனென்றால், அவ்விருவரும் அன்று காலை சண்டைபோட்டுக் கொண்டார்கள் அல்லவா ? அப்போது, அது முருகனுக்கு நினைவு வந்தது. பிறகு

அவன், வரதன் மீதிருந்த ஆசையால் தன் மனத்தை ஒரு வாறு சரிப்படுத்திக்கொண்டு, மெதுவாக அடிமேல் அடி வைத்து உள்ளே சென்றான். கண்ணன் அவ் வீட்டிற்கு வெளியே இருந்த திண்ணையின்மீது சாய்ந்த வண்ணம், 'இத்தனை நாள் பேசாதிருந்த நான் இன்று வரதனிடம் எவ்வாறு பேசுவது?' என எண்ணமிட்டுக் கொண்டிருந் தான்.

---

## 9. வரதன் எங்கே ?

வரதன் தாயாகிய குமுதவல்லி அன்று தன் மைந்தன் வருகையை மிக்க ஆவலோடு எதிர்பார்த்திருந்தாள். ஏனெனில், குமுதவல்லிக்கு வரதனையன்றி வேறு குழந்தை இல்லாமையால், அவள் அவனையே ஆணாக வும், பெண்ணாகவும் அலங்கரித்து அழகு பார்ப்பதுண்டு. அன்று மல்லிகைப்பூ மிகவும் மலிவாக விற்றதால், அவள் அதனை மிகுதியும் வாங்கிவைத்திருந்தாள்.

முருகன் உள்ளே சென்றபோது வரதனின் அன்னை, அம்மலர்களை மாலையாகத் தொடுப்பதில் கண்ணும் கருத் துமாய் இருந்தாள். ஆதலால் அவள், முருகன் வந்த தைக் கவனிக்கவேயில்லை. முருகன் சிறிது நேரம் அங்கே நின்றிருந்து, பின்னர் 'மாமி, வரதன் எங்கே ?' என்றான்.

இதைக் கேட்டதும் குமுதவல்லி, திடுக்கிட்டு நிமிர்ந்து நோக்கினாள். பின்னர், 'முருகா, நீ என்ன கேட்கிறாய் ? வரதன் உன்னுடன்தானே வரவேண்டும் ?

இன்று நீ பாடசாலையிலிருந்து வரும்போது அவனை அழைத்து வரவில்லையோ ?' என விரைந்து வினவினாள்.

அப்போது அவன் சிறிது திகைத்துப் பின்னர் 'மாமி, வரதன் இன்று பகல் பாடசாலைக்கே வரவில்லையே!' என்றான்.

இச்சொல் காதில் விழுந்ததும் அவள் கைகளும் கால்களும் நடுக்க மெய்தின ; நெருப்பை வாரிக் கொட்டியதுபோன்று அவள் அடிவயிறு குழம்பிற்று ; மார்பு 'படபட'வென்று அடித்தது ; அவள் கையிலிருந்த பூமாலை அவளை அறியாமலேயே நழுவித் தரையில் விழுந்தது. அவள் சிறிதுநேரம் ஒன்றும் தோன்றாமல் திகைத்தாள். பின்னர், அவள் 'முருகா, அவன் சாப்பிட்டதும் உங்கள் வீட்டுக்குத்தானே போனான் ! இன்று பகல் நீ அவனைப் பாடசாலைக்கு அழைத்துக்கொண்டு போகவில்லையோ ?' என்று வினவிக்கொண்டே தன் இருக்கையைவிட்டு எழுந்தாள்.

உடனே முருகன், 'மாமி, நான் இன்று பகல் முன்னதாகவே பாடசாலைக்குப் போய்விட்டேன். வரதன் எங்கள் வீட்டிற்கா சென்றான் ? நான் போய்ப் பார்த்து வருகின்றேன்' என்று சொல்லிக்கொண்டே வெளியே வந்தான். பின்னர் அவன், கண்ணனைக் கண்டு 'கண்ணா, வரதன் வீட்டில் இல்லை. அவன் என் வீட்டிற்குத்தான் சென்றானாம். நாம் அங்கே போய்ப் பார்க்கலாம் வா' என்று சொல்லி அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.

முருகன், தன் வீடுசென்று திரும்பிவரும்வரையில் அமைதியாய் இருக்கக் குமுதவல்லியால் இயலவில்லை. அவள் தெருவிற்குப் போய் எட்டிப்பார்த்தாள் ; மறுபடி

யும் வீட்டிற்குள் வந்தாள் ; பூத்தொடுக்க மணையின் மேல் அமர்ந்து இரண்டொரு மலரினைக் கையில் எடுத்தாள் ; 'அவன் ஏன் பாடசாலைக்குப் போகவில்லை, என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள் ; உடனே தன் இருக்கைவிட்டு எழுந்தாள் ; மறுபடியும் தெருவிற்குச் சென்றாள் ; வரதன் வருகையை எதிர்ப்பார்த்தவண்ணம் நின்றிருந்தாள்.

சிறிது நேரத்திற்கெல்லாம் முருகன் கண்ணனோடு தன் வீட்டிலிருந்து வந்தான். வரதன் அவர்களோடு வாராமையை அறிந்த குமுதவல்லிக்கு உள்ளம் திடுக்கிட்டது. அவர்கள் தொலைவில் வரும்போதே 'எங்கே வரதன் ?' என்று வினவினாள். 'மாமி அவன் அங்கு இல்லை' என்று முருகன் கூறியதும் அவள், 'ஐயோ ! நான் என் செய்வேன் !' என்று கண் கலங்கி நின்றாள் ; 'என் கண்மணி எங்கே சென்றான்?' என்று நாற்புறமும் சுற்றிப்பார்த்தாள் ; பின்கட்டிற்கு விரைந்து சென்று 'அம்மா, என் மகனைப் பார்த்தீர்களா ?' என்றாள்; 'இன்று அவன் பாடசாலைக்குக்கூடச் செல்லவில்லையாமே !' என்றாள் ; மறுபடியும் முன்கட்டிற்கு வந்தாள் ; 'வரதா—வரதா' என்று கூவிக்கொண்டே ஒவ்வொரு அறையாகச் சென்று தேடினாள் ; 'அடே முருகா நீ ஏன் இன்று அவனை உன்னோடு அழைத்துச் செல்லவில்லை ?' என்றாள். 'ஐயோ ! அவன் பாராக்குப் பார்ப்பவனாயிற்றே ! எங்குச் சென்றானோ! ' என ஏங்கினாள் ; 'ஆ ! அவன், தன் கைகளிலும் கால்களிலும் நகைகள் அணிந்திருக்கின்றானே !' என்றாள் ; நான் பாவி—அவன் செல்லும்போது கவனிக்காமற் போனேனே !' எனத் தன் மார்பில் அறைந்துகொண்டாள் ; 'அடே முருகா.

பாடசாலையில் நன்ருகப் பார்த்தாயா ?' என்ருள். அதற்கு அவன், ' மாமி. நான் நன்ருகப் பார்த்தேன் ; எங்கள் ஆசிரியர்கூட—அவன் ஏன் வரவில்லை—எனக் கேட்டார்' என்ருன். இதைக் கேட்டதும் அவள், ' ஐயோ ! நான் என்ன செய்வேன் ! என் கண்மணி—வரதன் எங்கே சென்றிருப்பான் !' என்று சொல்லிக்கொண்டே வயிற்றைப் பிசைந்தாள் ; தன் கைகளை நெறித்தாள் ; ' அடே, முருகா, நீ ஏன் அப்போதே இங்கு வரவில்லை ? என்ருள். அவள் மறுபடியும் முருகனை நோக்கி, 'நீ உன் வீட்டில் நன்ருகப் பார்த்தனையா ? அங்குள்ளோரைக் கேட்டனையா ?' என்ருள். அதற்கு முருகன் ' மாமி, நான் எங்கள் வீடு முழுவதும் தேடினேன் ; என் தாய், தங்கை, தமக்கை எல்லோரையும் வினவினேன் ; அவர்கள்— 'வரதன் இன்று பகல் உன்னைத் தேடிக்கொண்டு வந்தான்; நீ பள்ளிக்கூடம் போய்விட்டாய் என்பதை அறிந்ததும் அவனும் போய்விட்டான்—என்ருர்கள் ; நான் பிறகு எங்கள் வீட்டுப் புறக்கடையிலும் சென்று தேடினேன் ; அவன் அங்கும் இல்லை ' என்ருன். இதைக் கேட்டதும் குமுதவல்லி தங்கள் வீட்டுப் புறக்கடையிலும் தேடினள். பின்னர் அவள், ' முருகா, இந்த எதிர் வீட்டில் கேட்டுப்பார் ' என்ருள் ; ' அதற்கு அடுத்த வீட்டில் போய்ப்பார் ' என்ருள் ; சந்து முனையில் பார் ' என்ருள்; ' அங்கே விளையாடும் சிறுவர்களைக் கேள் ' என்ருள்.

முருகனும் கண்ணனும் பல இடங்களிலும் சென்று தேடினர்கள். வரதன் எங்கும் அகப்படவில்லை. முருகன் மனத்துயரம் சொல்லி முடியாது. கண்கலங்கி நின்ருன். கண்ணனும் கண்கலங்கி நின்ருன். வரதன் தாயோ வாய் விட்டு அழ ஆரம்பித்துவிட்டாள். அவள் அழுகையொலி

கேட்டு அக்கம் பக்கத்திலுள்ள ஆண்களும் பெண்களும் அங்கு வந்து கூடிவிட்டார்கள்.

மணி ஐந்துக்குமேல் ஆகிவிட்டது. வரதன் அப்போதும் அகப்படவில்லை. முருகனும் கண்ணனும் ஒரு வீடல்ல, ஒன்பது வீடுகள் சென்று தேடினார்கள்; ஒரு தெருவே யன்றிப் பல தெருக்களிலும் சென்று தேடினார்கள்; பாடசாலைப் பிள்ளைகளின் வீடுகளிலெல்லாம் சென்று தேடினார்கள். எங்குத் தேடியும் வரதனைக் கண்டுபிடிக்க அவர்களால் இயலவே வில்லை.

சிறிது நேரத்திற்கெல்லாம் வரதன் தந்தை, வீடு வந்து சேர்ந்தார். அவர், தம் மைந்தன் காணப்படவில்லை என்பதை அறிந்ததும் உள்ளம் திடுக்கிட்டார்; உடலம் வியர்த்தார். அவருக்குச் செய்வது இன்னதென்று தெரியவில்லை. அவர் அங்கும் இங்கும் ஓடினார்; அக்கம் பக்கம் உள்ளவர்களை யெல்லாம் அழைத்தார்; 'என் மகனைப் பார்த்தீர்களா — பார்த்தீர்களா?' என்றார்; பள்ளிக்கு விரைந்து ஓடினார்; தம் சுற்றத்தார் வீடுகளிலெல்லாம் சென்று தேடினார். எங்கெங்குச் சென்றும் வரதன் அகப்படவில்லை. ஆதலால் அவர், தலைமேல் கை வைத்து வருந்தலாயினார்; 'ஐயோ! அவன் அறியாத குழந்தையாயிற்றே!' என்றார்; 'அவனுக்குக் கிழக்கு மேற்கு தெரியாதே' என்றார்; 'அவன் எங்கே சென்று வழியறியாமல் விழிக்கின்றானோ!' என்றார். பின்னர் அவர், முருகனை நோக்கி 'அடே முருகா, உன்னை நம்பி அன்றோ என் குழந்தையை அனுப்பினேன்? நீ இப்படியும் செய்யலாமா?' என்றார்.

இவ்விதம் சிறிது நேரம் சென்றது. அப்போது முருகன் உடன்பிறந்தார் இருவரும் அங்கே வந்தனர். வரதன் காணாமையை அறிந்ததும் அவர்கள் பெரிதும் வருந்தினர்; முருகனைக் கடிந்து பேசினர். அவர்களுள் இளையவன் அவனை அடிக்கவும் சென்றான். அப்போது முருகன் யாதும் மறுமொழி கூறாமல் மிக்கவருத்தத்துடன் தலை குனிந்து நின்றான்.

வரதன் காணப்படவில்லை என்னும் செய்தி அங்கு உள்ள எல்லோருக்கும் எட்டிவிட்டது. அவனைக் குறித்து வருந்தாதார் அங்கு எவரும் இலர். ஆண் பெண் அனைவர்களும் அவனையே தேடலாயினர். சிலர் கிழக்கே சென்றனர்; சிலர் மேற்கே சென்றனர்; சிலர் தெருக்கள் தோறும் சென்று அலைந்தனர்; சிலர் வீடு வீடாய் நுழைந்து பார்த்தனர்; தோட்டம், துரவுகளுக்கு ஓடினர் சிலர்; குளம் குட்டைகளைத் தேடினர் சிலர்.

வரதன் காணாமை கேட்டுப் பள்ளிப் பிள்ளைகளிற் பலரும் அங்கே வந்திருந்தனர். தலைமை ஆசிரியரும், பிற ஆசிரியர்களுங்கூட 'வரதன் எங்கே சென்றான்' என்பதை அறிந்து கொள்ள அங்கே வந்திருந்தனர். அந்த ஆசிரியர்களைக் கண்டதும் வரதன் தந்தை குழந்தை போல் குரலெடுத்து அழ ஆரம்பித்துவிட்டார்; 'ஐயா, என் மகனைக் கண்டீர்களா' என்றார்; 'ஐயோ! நான் என்ன செய்வேன்! எனக்கு அவன் ஒருவன்தானே இருக்கின்றான்' என்றார். அப்போது தலைமை ஆசிரியர் வரதன் தந்தைக்குத் தேறுதல் பல கூறி, 'ஐயா, நீங்கள் இச்செய்தியைக் காவல்கூடத்துக்குத் தெரிவித்தீர்களா ?' என்றார். இதைக் கேட்டதும் முருகனின் மூத்த தமய

ளுகிய சுந்தரன் என்பவன் காவல் நிலையத்துக்கு விரைந்து ஓடினன்.

மணி ஆறும் ஆயிற்று; அப்போதும் வரதன் வர வில்லை. அவனைத் தேடிச் சென்றவருள் எவரும் அவனைக் கண்டதாகவும் செய்தி கூறவில்லை. காவல் நிலையம் சென்ற சுந்தரனும் சிறிது நேரத்திற்கெல்லாம் அங்கே வந்து சேர்ந் தான். அவனைக் கண்டதும் அங்குள்ள அனைவரும் மிக்க ஆவலோடு, 'என்ன செய்தி ? வரதன் அகப்பட் டானு !' என்று கேட்டனர். அதற்குச் சுந்தரன், தான் அங்கே போய் விசாரித்ததாகவும், வரதனைக் குறித்து அவர்களுக்கு யாதும் தெரியவில்லை யென்றும், தான், வரதனின் அங்க அடையாளங்களையும், வீட்டின் முக வரியையும் தெரிவித்திருப்பதாகவும், அவர்கள் அவனை எவ்விதமேனும் கண்டு பிடித்துத் தருவார்களெனவும் கூறினன்.

யார் என்ன கூறியும் வரதன் தாயும் தந்தையும் சிறி தும் தேறுதல் அடையவில்லை. மணி ஆக ஆக அவர்க ளுக்கு அழையும் துக்கமும் அதிகமாயின. சுந்தரன் உட னுக்குடன் காவல் நிலயத்துக்குப் போவதும் வருவது மாக இருந்தான். மற்றவர்களும் ஓய்வாக இராமல், மேலும் மேலும் தேடியவண்ணமாகவே இருந்தார்கள்.

மணி ஏழடித்தது; இரவும் நன்ருக வந்துவிட்டது. எல்லோர் வீட்டிலும் விளக்குகள் வைத்து விட்டார்கள். அப்போதும் வரதன் வந்தபாடில்லை. அவன் அன்னை ஒருபுறம் அழுதவண்ணமாய் இருக்கிருள்; தந்தையோ தவிக்கின்ருர். அவர் ஓர் இடத்திலேனும் அமைதியாக ஒரு சிறிது நேரமேனும் அமர்ந்திருக்கவில்லை. அவர் தெருவிற்குப் போவார்; வீட்டிற்குள் நுழைவார்;

தேடின இடங்களையே பன்முறையும் தேடுவார் ; கேட்டவர்களையே பன்முறையும் கேட்பார் ; 'அப்பா, வரதா—வரதா, நீ எங்கிருக்கின்ருய் ! என்பார் ; 'ஐயோ ! நான் மறுபடியும் என் மகனை எப்போது காண்பேன் !' என்பார் ; 'விளக்கு வைத்து நெடுநேரமாகிவிட்டதே ! என் மகன் இன்னமும் வரவில்லையே !' என்பார்.

---

## 10. வெங்கடேசப் பெருமாள்

மணி ஏழும் ஆயிற்று ; எட்டும் அடித்து விட்டது ; வரதன் அப்போதும் வரவில்லை. எல்லோரும் தேடித் தேடி இளைத்து விட்டார்கள். சுந்தரன் போலீசுக்கும் வீட்டுக்குமாகப் பன்முறை நடந்தும் பயனில்லாமற் போயிற்று. பள்ளியில் பிள்ளைகளெல்லாம், நாழிகையாகிவிட்டதால் தத்தம் வீடுகளுக்குச் சென்று விட்டார்கள். அங்குள்ள பெண்களிலும் பெரும்பாலோர் தங்கள் வீடுகளுக்குச் சென்று விட்டார்கள். ஆடவரிலும் அநேகர் நாழிகை ஆக ஆக மெல்ல -- மெல்ல அகன்று விட்டார்கள். தலைமை ஆசிரியர் நீங்கலாகப் பிற ஆசிரியர்களும் ஒவ்வொருவராக, 'இதோ வருகின்றேன்' என்றும், வீட்டிற்குப் போய் வருகின்றேன்' என்றும் சொல்லிப் போய்விட்டார்கள். கண்ணனும் முருகனும், அவ்விடத்தைவிட்டு அகலவேயில்லை. அவர்கள், தம் நண்பன் வரதனைக் குறித்தே நினைந்து நினைந்து அழுது கொண்டிருந்தார்கள். சுந்தரன் நெடுநேரம் வரையில் தைரியமாகவே இருந்தான். ஆனல், நாழிகை ஆக-ஆக அவனும் வருந்த ஆரம்பித்தான்.

தலைமை ஆசிரியரும் இன்னது செய்வதென்று தெரியாமல் விழிக்கலாயினர். பின்னர் அவர், வரதன் தந்தையை அழைத்து, 'ஐயா, உங்களுக்கு வெளியூரில் யாரேனும் சுற்றத்தார் இருக்கின்றனரா?' என வினவினர்.

அதற்கு அவர், 'ஐயா, இருக்கின்றார்கள்; ஆனாலும், என் மகன் அங்கே யெல்லாம் எப்படிப் போய்விடுவான்? என் தம்பி **வரதராசன்** பெங்களூரில் இருக்கின்றான்; என் மைத்துனர் **திருவேங்கடப் பிள்ளை** செங்கற்பட்டில் இருக்கின்றார்' என்றார்.

அப்போது 'செங்கற்பட்டிற்கேனும் எதற்கும் ஒரு தந்தி கொடுக்கலாமா?' என்றான் சுந்தரன்.

'அது பயனில்லை; அவன் அவ்வளவு தூரம் சென்றிருக்கமாட்டான்' என்றார் அந்த ஆசிரியர்.

உடனே அங்கிருந்தவர்களுள் ஒருவர் வரதன் தந்தையைப் பார்த்து, 'ஐயா, அவனுக்கு உங்கள் வீட்டின் முகவரி தெரியுமா?' என்றார்.

அவன் தந்தை சிறிதுநேரம் விழித்துப் பிறகு 'என்னமோ அது எனக்குத் தெரியாது' என்றார்.

அப்போது சுந்தரன், தன் தம்பியைக் கூப்பிட்டு, 'அடே முருகா, இன்று வரதன், தான் எங்கேயாவது போவதாகச் சொன்னானா? அல்லது உன்னையும் கூப்பிட்டானா?' என்று வினவினன்.

அதற்கு முருகன், 'அண்ணா, அவ்விதம் அவன் ஒன்றும் சொல்லவில்லை. நாங்கள் திருநாளைப் பற்றித்தான் இன்று பேசிக்கொண்டிருந்தோம்' என்றான்.

'அப்படி யானுல், அந்த வேடிக்கையில்தான் அவன் கலந்துகொண்டிருக்க வேண்டும்' என்று ஆசிரியர் கூறி னர்.

'நாங்கள் அந்த இடங்களிலெல்லாம் எத்தனையோ முறை சுற்றிப் பார்த்தோம்? அவன் எங்கும் அகப்பட வில்லை' என்று அங்குள்ளவர்கள் கூறினுர்கள்.

மணி ஒன்பது அடித்தது. வரதன் சென்ற இடமோ ஒருவருக்கும் தெரியவில்லை. அதுபோது. அவன் அன்னை அடைந்த துன்பம் மிகவும் பெரியது. 'ஐயோ! நான் என் மகனை உயிரோடு பறிகொடுத் தேனே' என்பாள்; 'என் கண்ணே, நான் உன்னை மறு படியும் எப்போது காண்பேன்' என்பாள்; 'ஆ; அவன் அறியாத குழந்தை ஆயிற்றே!—அவனுக்குச் சூது, வாது தெரியாதே!' என்பாள்; 'ஐயோ! இது பாழான பட்டணமாயிற்றே!' என்பாள்; 'எந்தப் படுபாவி என் குழந்தையை மயக்கி மோசம் செய்துவிட்டானே!— என் கண்மணி, எங்கே கண்கலங்கி நிற்கின்ருனே!— என் செல்வம், எங்கே வழி யறியாது விழிக்கின்ருனே!' என்ப் பலப்பல சொல்லிச் சொல்லித் தரையில் விழுந்து அழுவாள்; மெல்ல எழுந்து ஏங்கியிருப்பாள்; ஏதேதோ என்றுவாள்; பித்தம் பிடித்தவள்போல் வருவார்— போவாரோடெல்லாம், 'என் மகனைக் கண்டீர்களா? என்பாள்; கடவுளை நோக்கித் தொழுவாள்; 'ஓ! தெய் வமே, உனக்குப் பொங்கலிடுகின்றேன்—பூசைபோடுகின் றேன்' என்பாள்; 'ஓ ஏழுமலையானே, திருப்பதி வெங்க டேசப் பெருமாளே, என் கண்மணி—வரதன் இன்றைக் குள் அகப்பட்டால், நாங்கள் உன் எல்லைக்கு வந்து

குடும்பத்துடன் முடிகொடுக்கின்ருேம் ’ என்பாள் ; ‘ ஓ! பழனியாண்டவனே, தணிகாசலபதி, என் மைந்தன் இன்றைக்குள் வந்துவிட்டால், நான் உங்கள் கோயி லுக்கே வந்து அடிதண்டம் போடுகின்றேன் என்பாள் ; கருப்பூரம் ஏற்றுவாள் ; கப்பணம் கட்டுவாள்.

———

## 11. தொப்பியும் பலகையும்

மணி பத்தடிக்கும் சமயம் ஆயிற்று. அப்போது, அந்த ஆசிரியர், அங்குள்ளோர்களைப் பார்த்து, ‘வரதன் வரு வான்—வருவான் ’ என்று நாம் அரசாங்கக் காவல் நிலை யத்தாரையே நம்பிக்கொண்டிருப்பதில் பயனில்லை ; சுற்றிச்சுற்றி இங்கேயே பார்ப்பதிலும் பயனில்லை. நாம் இப்பட்டணத்திற்கு அடுத்துள்ள ஊர்களிலும், கிரா மங்களிலும் சென்று தேடவேண்டும் ’ என்ருர்.

அதற்கு வரதன் தந்தையாகிய தாமோதரப் பிள்ளை மிக்க வருத்தத்தோடு, ‘ இவ்வாறெல்லாம் சென்று தேடு தற்கு இங்கே யார் இருக்கின்ருர்கள் ? அதற்கு ஆளும் அம்பும் வேண்டுமே ! நான் ஒருவன் எங்கெங்கே சென்று தேடுவேன் ’ என்ருர்.

அப்போது அந்த ஆசிரியர் ; ‘ நீங்கள் வேண்டாம், உங்களால் அவ்விதம் இயலாது. நீங்கள் இங்கேயே இருந்து அக்கம்பக்கங்களில் தேடிக்கொண்டிருங்கள். என்னோடு யாரேனும் ஒருவர் வந்தால் போதும். நான் போய்ச் சுற்றிப்பார்த்து அவனை எவ்விதமேனும் கண்டு பிடிக்க முயல்கின்றேன் ’ என்ருர்.

அப்போது முருகன் தமையன்மார் இருவரும், 'நான் —வருகின்றேன்' ; ' நான் வருகின்றேன் ' என்று கூறி முன்வந்து நின்றனர்.

அந்த ஆசிரியர், முருகன் மூத்த தமையனாகிய சுந்தரனைத் தம்முடன் வரும்படி கூறி, இளைய தமயனாகிய கந்தனிடம், ' நீ அடிக்கடி போலீசுக்குச் சென்று விசாரித்து வா ' என்று சொல்லி, வரதனைத் தேடுவதற்கு உடனே புறப்பட்டுச் சென்றார்.

அவ்விருவரும் சென்ற சிறிது நேரத்திற்குள், காவல் நிலையக் காவலர் இருவர் வரதன் வீட்டைத் தேடிக் கொண்டு வந்தார்கள். அவர்களுள் ஒருவன், ஒரு தொப்பியைக் கையில் வைத்துக்கொண்டிருந்தான் ; மற்றொருவன் பலகை புத்தகங்களை வைத்திருந்தான். அங்கே வந்ததும் அவர்களுள் ஒருவன், தாமோதரப் பிள்ளையை அழைத்துத் தொப்பியையும், பலகை புத்தகங்களையும் காட்டி, 'இவை யாருடையன' என்றான்.

அவைகளைக் கண்டதும் தாமோதரப்பிள்ளை, தம் மைந்தனையே கண்டதாக ஆனந்தித்தார் ; ' எங்கே வரதன் ?—எங்கே வரதன் ' என்று வினவிக்கொண்டே மிக்க ஆவலோடு அருகே வந்தார். அப்போது குமுத வல்லியும் அங்கே விரைந்து வந்தாள். அவள் அக்காவலர்களை நோக்கி, ' ஐயா, எங்கே என் கண்மணி ?— எங்கே என் செல்வன் ?—அவனைக் கண்டீர்களா ?— அழைத்து வந்தீர்களா ?' என ஆவலோடு கேட்டாள்.

அதற்கு அவர்களில் ஒருவன், ' அம்மா, நாங்கள் உங்கள் மகனைக் காணவேயில்லை ' என்றான்.

'ஆனால், இவை உங்களுக்கு எங்கே கிடைத்தன ?' என்று மிக்க கவலையோடு கேட்டார் தாமோதரப்பிள்ளை.

அதற்கு மற்றொரு காவலன், 'ஐயா, நாங்கள் சுற்றி வரும்போது இரண்டு கரிவேடக்காரர்கள் மிகுதியும் குடித்துவிட்டு, ஒருவர்மே லொருவர் விழுந்து கொண்டு வந்தார்கள். ஆதலால், நாங்கள் அவர்களைப் பிடிக்கச் சென்றோம். அப்போது, அவர்களுள் ஒருவன் இந்தத் தொப்பியையும், மற்றொருவன் பலகை புத்தகங்களையும் வைத்திருந்தான் ;—இவை எப்படிக் கிடைத்தன—என்று நாங்கள் அவர்களைக் கேட்டபோது, முதலில் அவர்கள் மிரள-மிரள விழித்தார்கள். பின்னர் நாங்கள், அவர்களைக் காவல் நிலையத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் உதையும், குத்தும் கொடுத்தோம். அப்போது அவர்கள், தாங்கள் வழியில் ஒரு சிறுவனைக் கண்டதாகவும், அவனிடமிருந்து பிடுங்கிக்கொண்டதாகவும் கூறினார்கள். பிறகு நாங்கள்—அச்சிறுவன் எங்கே ?—என்று கேட்டோம். அதற்கு அவர்கள், தங்களுக்குத் தெரியாது என்று சொன்னார்கள். நாங்கள் மேலும்—மேலும் உதையும் குத்தும் கொடுத்தோம் ; என்ன செய்தும் அவர்கள்—'சாமி சாமி, எங்களை அடிக்காதிர்கள் ; அவன் எங்கே போனானோ எங்களுக்குத் தெரியவே தெரியாது' — என்று ஒரே பிடியாகக் கூறிச் சத்தியம் செய்தார்கள். ஆதலால், நாங்கள் அவர்களைக் காவல் நிலையத்திலேயே அடைத்து வைத்திருக்கின்றோம்' என்றான்.

இதனைக் கேட்டதும் தாமோதரப்பிள்ளை, பேசவும் மாட்டாது திகைத்து மரம்போன்று சிறிது நேரம் நின்றார். பிறகு அவர், 'ஐயோ ! மகனே !' என்று கூறி 'ஓ'வென இரைந்து அழ ஆரம்பித்தார். குமுதவல்லியோ

மூர்ச்சை யடைந்து நிலத்தில் சாய்ந்தான். அப்போது, அருகே இருந்த சில பெண்கள் ஓடிவந்து அவன் களைப்பைப் போக்கினர். உணர்வு சிறிது வந்ததும் குமுதவல்லி, 'ஐயோ! என் மகனே,—என் கண்ணே,—என் செல்வமே—என் துரையே' என்று சொல்லிச் சொல்லி வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டாள்; நிலத்தில் புரண்டு புரண்டு அழுதாள்; மறுபடியும் மூர்ச்சை யடைந்தாள்.

அவன் தந்தையோ சுவரில் தலையை மோதினர்; 'இனி நான் உயிர்வாழேன்—உயிர்வாழேன்' என்றார்; பித்தம் பிடித்தவர்போல் அங்கும் இங்கும் ஓடினர்; 'அப்பா வரதா, என் மகனே—என் மகனே, உன்னை நான் எப்போது காண்பேன்!' என்று சொல்லித் தம் கைகளால் முகத்தை மூடிக்கொண்டு தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தார்.

மூர்ச்சை யடைந்திருந்த குமுதவல்லி மறுபடியும் சிறிது தெளிவடைந்து, 'ஓ' வெனப் புரண்டு அழுதாள்; 'ஆ! தெய்வமே உனக்குக் கண்ணில்லையா?' என்பாள்; 'என் கண்ணை—என் செல்வத்தை—என் கிளியினை நான் எப்போது பார்ப்பேன்' என்பாள்; 'ஆ! என் அறிவுள்ள துரையே, மாணிக்கக் கட்டியே, உன் அழகான பேச்சை நான் எப்போது கேட்பேன்?' என்பாள்; 'ஐயோ! என் மகனே, நாங்கள் உன்னைக்கொண்டு கரையேறலா மென்று இருந்தோமே!—ஓ! தெய்வமே, எங்கள் வாயில் மண்ணைப்போட்டாயே?' என்பாள்.

இவர்கள் இவ்விதம் அழுவதைக் கண்டு முருகனும் கண்ணனும்கூட அழுதார்கள். பிறகு, அங்கிருந்து

எல்லோரும் அழ ஆரம்பித்துவிட்டார்கள். செய்தி சொல்லவந்த காவலர் இருவரும் அசைவற்று நின்றிருந்தார்கள். அப்போது, அக்கம் பக்கத்தார் அனைவரும் அங்கே வந்து சூழ்ந்துகொண்டனர். இறந்தவர் வீட்டில் நடக்கும் செயல்களெல்லாம் அங்கே காணப்பட்டன வென்றே சொல்லுதல்வேண்டும்.

இவ்விதம் சிறிதுநேரம் சென்றது. அப்போது, அடுத்த வீட்டிலிருந்த ஒரு பெரியவர், தாமோதரப் பிள்ளையின் அருகே வந்து, 'ஐயோ, நீங்கள் ஏன் இப்படி அழுகின்றீர்கள்? முதலில் செய்தியைச் சொல்லுங்கள்' என்று உரத்த குரலெடுத்துக் கேட்டார்.

அதற்குத் தாமோதரப்பிள்ளை, 'ஐயோ! நான் என்னவென்று சொல்லுவேன்—என் மகன் போய் விட்டானே—அவனை நான் எப்போது பார்ப்பேன்' என்று கூறி அழுதார்.

'என்ன? போய்விட்டானா! ஐயா, அவன் எங்கே போய்விட்டான்? ஊரில் பிள்ளைகள் போவதில்லையா?—மறுபடியும் அகப்படுவதில்லையா? இதற்காகவா இப்படி அழவேண்டும்? பள்ளி ஆசிரியர் ஒருபுறம்—நாம் ஒரு புறம்—போலீசார் ஒருபுறம்—இப்படி எல்லோரும் அவனைத் தேடிக்கொண்டு தானே இருக்கின்றோம்! இதற்குள் நீங்கள் ஏன் அழவேண்டும்?' என அப் பெரியவர் பலப்பல சொல்லிக்கொண்டே வரதன் அன்னை யின் அருகே சென்று, 'அம்மா குமுதவல்லி, நீ என்ன பைத்தியக்காரப் பெண்ணாக இருக்கின்றாய்? உன் மகனுக்கு இப்போது என்ன தீங்கு நேர்ந்துவிட்டதென்று நீ இப்படி ஆரவாரம் செய்கின்றாய்?—இன்னும் தேடிச்

சென்றவர்கள் ஒருவரும் வரவில்லை ; வரதனைக் குறித்து ஒரு செய்தியும் தெரியவில்லை—அப்படியிருக்க, நீங்கள் ஏன் அழவேண்டும் ? இஃதென்ன அவலட்சணம் ?' என்று சிறிது கடிந்து பேசினர்.

அப்போது குமுதவல்லி, 'ஓ! தாதா—தாதா, உங்களுக்கு இன்னமும் விளங்கவில்லையா ? என் கண்மணி —வரதன் இன்னமும் வரப்போகின்றனா ? என் பாலகனை என்னென்ன செய்தார்களோ? என்கண்மணி—அப்போது எவ்வாறு கலங்கினனோ ? அந்தப் பாழும் தெய்வம் அவர்களுக்குக் கூலி கொடுக்காதா ? ஐயோ ! நான் என்செய்வேன் — என்செய்வேன் — ' என்று சொல்லிப் புலம்பினள்.

அப்போது அப்பெரியவர், குமுதவல்லியின் அருகே அமர்ந்து சிறிது நிதானமாக, 'அம்மா, நீ படித்த பெண்தானே ? நன்ருக யோசித்துப் பார் ; நான் இப்போதுதான் போலீசுக்கு நேராகச் சென்று எல்லாச் செய்திகளையும் நன்ருகக் கேட்டறிந்து வந்தேன். உன் மகனுக்கு நீங்கள் நினைக்கின்றபடி தீங்கு ஒன்றும் நேர்ந்ததாக எனக்குத் தோன்றவில்லை. அந்தக் கரிவேடக்காரர்கள் குடியின் வெறியினுல் எதையும் செய்திருக்கலாம் என்று நீங்கள் எண்ணலாம். அவர்கள் பேச்சினுலும், முகக்குறியினுலும் எனக்கு அவ்விதம் தோன்றவேயில்லை. அம்மா, என் சொல்லில் உனக்கு நம்பிக்கை யில்லாவிட்டால், இதோ நிற்கின்ருர்களே—இந்தப் போலீஸ் காவலர்களை வேண்டுமானுல் கேட்டுப் பார். இவர்கள் இப்படி எத்தனைப் பேர்களைப் பார்த்திருக்கின்ருர்கள் ! இவர்களுக்கு இத்தகைய நிகழ்ச்சிகளில் எவ்வளவு பழக்கமிருக்கின்றது !' என்று

சொல்லிக்கொண்டே அங்கு நின்றிருந்த காவல்நிலையக் காரர்களை அழைத்து வினவினர்.

அதற்கு அவர்கள், அப்பெரியவர் சொல்லுவது போலவே தாங்களும் எண்ணுவதாகக் கூறினர்கள். ஆதலால், அங்கிருந்தோரது அழுகை யொலியும் சிறிது சிறிதாகக் குறைந்தது.

அப்போது, தாமோதரப்பிள்ளைக்கும் சிறிது தைரியம் பிறந்தது. ஆதலால் அவர், தம் கண்களைத் துடைத்துக்கொண்டு அப்பெரியவரைப் பார்த்து 'அப்படியானல் என் மகன் இன்னமுமா அகப்படாமல் இருப்பான்!' என்றார்.

அதற்கு அப்பெரியவர், இது என்ன ஆச்சாரியம்? என் மைத்துனன் சோமசுந்தரன் மிகச் சிறுவனாக இருக்கும்போது ஒருமுறை காணமற்போய் மூன்று நாட்கள் கழித்தல்லவா அகப்பட்டான்! அப்போது இந்தப் போலீசார்களே அவனைக் கண்டுபிடித்துக் கொடுத்தார்கள்? —ஏன்? இவ்வளவுதானா—பிள்ளைகள் காணமற் போவதையும், பிறகு ஒருவாரம், இரண்டு வாரம் கழித்துக்கூட அகப்படுவதையும் நான் பத்திரிகையில் எத்தனையோ முறை படித்திருக்கிறேன். உங்களுக்கு இவன் ஒரு பிள்ளையாக இருப்பதனல் இப்படி அச்சப் படுகின்றீர்கள்! நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம். உங்களுக்குக் கடவுள் ஒரு குறையும் வைக்கமாட்டார்' என்றார்.

அப்பெரியவர் சொல்லுக்கு அப்போது பெரிதும் மதிப்பே இருந்தது. ஆதலால், அங்குள்ள ஆண்களும் பெண்களும் அவர் பேச்சினையே ஆதரித்துப் பேசினர்

கள். என்ன கூறியும் குமுதவல்லியின் கண்களில் நீர் வடிந்த வண்ணமாகவேயிருந்தது; தாமோதரப்பிள்ளையும் எண்ணமும் ஏக்கமும் கொண்டவராகவே யிருந்தார்.

---

## 12. 'வரதா—வரதா!'

மணி இரவு பதினொன்றாயிற்று; பன்னிரண்டும் அடித்தது. வரதனும் அகப்படவில்லை; கண்ணனும் முருகனும், வரதன் வீட்டின் ஒரு மூலையில் அமர்ந்து அழுது கொண்டேயிருந்து, பின் அங்கேயே உறங்கிவிட்டார்கள். பெரியோர்களிலும் பலர் உட்கார்ந்தவண்ணம் அங்கே உறங்கி விழுந்தார்கள்.

முருகன் அன்னையும், மற்றும் இரண்டொரு பெண்களும், 'வரதன் இதோ வந்துவிடுவான்—ஏன்? வந்து கொண்டே யிருப்பான்' என்று குமுதவல்லிக்குத் தேறுதல் கூறிக்கொண்டேயிருந்தனர். என்றாலும், குமுதவல்லி சிறிதும் தேறுதல் அடையவில்லை. அவள் அங்குள்ளோரைப் பார்த்து, 'அம்மா, நான் என்றும் என் குழந்தையை விட்டுப் பிரிந்திருந்த தில்லையே' என்பாள்; 'ஆ! நான் இன்று அவனுக்குப் பூமுடித்து அழகுபார்க்க வேண்டுமென்று, மல்லிகைப்பூ மிகுதியும் வாங்கிவைத்தேனே' என்பாள்; 'அம்மா, நாங்கள், அவன் ஒருவனைக் கொண்டு ஊராளலாம் என்று எண்ணியிருந்தோமே,' என்பாள்; 'என் கண்ணே, வரதா நீ எங்கேயடா இருக்கின்றாய்?' என்பாள்; 'ஐயோ! மணி ப்ன்னிரண்டுக்கு மேல் ஆகிவிட்டதே!' என்பாள்; 'அம்மா, அவன்

இன்னமும்—வருவான் வருவான்—என்று சொல்லுகின்றீர்களே' என்பாள்; 'என் செல்வத்தை நானும் சென்று தேடுகிறேன்' என்பாள்; எழுந்து நிற்பாள்; இரண்டொரு அடிகளும் எடுத்து வைப்பாள். அப்போது, அருகேயிருப்பவர்கள் அவளைப் பிடித்து உட்காரவைத்துப் பலப்பல கூறி அவள் துயரத்தைப் போக்க முயல்வார்கள்.

வரதன் தந்தையாகிய தாமோதரப்பிள்ளையும் அவ்வாறே வருந்திக்கொண்டே யிருந்தார். அப்போது, அடுத்த வீட்டுப் பெரியவர் அவருக்குத் தைரியம் சொல்லிக்கொண் டிருந்தார். முருகன் இளைய தமயனாகிய கந்தனும் அருகே யிருந்து அப்பெரியவர் சொல்லுவதற்கெல்லாம், 'ஆம்'—'அப்படித்தான் இருக்கவேண்டும்'—'அதுவே சரி' என்று கூறித் தலை யசைத்துக் கொண்டிருந்தான்.

தாமோதரப்பிள்ளை, அவர்களை அழைத்துக்கொண்டு காவல் கூடம் செல்லுவார்; இரண்டு மூன்று தெருக்கள் சுற்றுவார்; குளம் குட்டைகளைக் கூர்ந்து நோக்குவார்; மறுபடியும் வீட்டுக்கு வருவார்; திண்ணையின்மேல் உட்கார்ந்து கொண்டு முகவாய்க்கட்டையின்மேல் கையை வைத்துக்கொண்டு ஏதேதோ எண்ணுவார்; மறுபடியும் எழுந்து உலாவுவார்; உள்ளே சென்று தம் மனைவிக்குத் தேறுதல் கூறுவார்; முடிவில் தாமே அழுவார்; 'என் மகனே - மகனே, உன்னை இவ்விதம் இழக்கவோ நான் இத்தனை நாள் வளர்த்தேன்' என்பார்; 'ஆ! இதுவரையில் வராதவன் இனி வரப்போகின்றானோ' என்பார்; 'நான் பேதை—அவன் வருவான் வருவான்—என்று இன்னமும் எண்ணிக் கொண்டிருக்கின்றேனே!' என்

பார்; மறுபடியும் தேடத் தொடங்குவார்; சிறிது நேரத்திற்குள் சலிப்புற்றுத் திரும்பிவந்து, திண்ணையில் அமர்வார்; 'எங்கே அந்த ஆசிரியர்?—தேடப்போனவர் இன்னமும் வரவில்லையே!' என்பார்; எழுந்து வழி நோக்கி நிற்பார்; 'ஐயா—பெரியவரே, என்மகன் வருவானு?' என்பார்; 'என்னமோ!—நான் உங்கள் சொல்லையே நம்பிக்கொண்டிருக்கிறேன்' என்பார். அப்போது, அருகிலிருந்த அப் பெரியவரும், கந்தன் என்னும் சிறுவனும், அவர் மனநிலைக்கு ஏற்றபடி தேறுதல் சொல்லிக்கொண்டு இருந்தார்கள்.

மணி ஒன்றடித்தது—இரண்டடித்தது; மூன்றும் ஆயிற்று. வரதனே வரவில்லை; தேடச் சென்ற சுந்தரனும், அந்தத் தலைமை ஆசிரியரும் திரும்பி வரவில்லை. எல்லோருக்கும் ஏக்கம் அதிகமாயிற்று. அரசாங்கக் காவலர் 'எல்லாம் பொழுது விடிந்தால்தான் தெரியும்; இங்கே நீங்கள் அடிக்கடி வந்து எங்களை ஏன் தொந்தரவு செய்கின்றீர்கள்?' என்றனர். வரதன் அன்னையோ அழுது அழுது அறிவு சோர்ந்து நிலத்தில் விழுந்து கிடந்தாள். அவன் தந்தையோ தலைமேல் கைவைத்துக் கொண்டு கண்ணீர் வடித்தவண்ணம் ஓர் திண்ணையில் அமர்ந்திருந்தார்.

மறுநாள் காலை, மணி ஏழாயிற்று; அப்போதும் வரதன் வரவில்லை. அவர்களைத் தேடச் சென்ற தலைமை ஆசிரியரும் சுந்தரனுங்கூட வரவில்லை. பாடசாலைப் பிள்ளைகளும், பிற ஆசிரியன்மார்களும், அக்கம்பக்கத்துள்ள ஆண்களும் பெண்களும் முன்புபோல் திரளாகக் கூடிவிட்டார்கள். 'வரதன் எங்கே சென்றிருப்பான்?' —'அந்த ஆசிரியர் ஏன் இதுவரையில் வரவில்லை?'

என்னும் பேச்சுக்களே அங்குள்ள எல்லோரிடத்தும் குடிகொண்டிருந்தன. போலீஸ்காரர்கள், அந்தக் கரி வேடக்காரர்களுக்கு உதையும், குத்தும் கொடுத்து அவர்கள் வாய்ப்பிறப்பைத் தெரிந்துகொள்ளுவதிலேயே முனைந்து நின்றனர். வரதன் அன்னைக்கு அழுகையும் துக்கமும் அதிகரித்தனவேயன்றிக் குறைந்தபாடில்லை. கண்ணனும் முருகனுங்கூட அழலாயினர். அங்கு வந்திருந்த பிள்ளைகளிலும் அநேகர், தம் கண்களில் நீர்வடித்தனர். பாடசாலை ஆசிரியரில் ஒருவர், 'வெளியூரிலுள்ள சுற்றத்தாருக்கு எதற்கும் தந்திகொடுத்துப் பார்த்தல் நலமே' என்றனர். கந்தன் அவ்விதமே தந்தி கொடுப்பதற்கு விரைந்து ஓடினன்.

காலை மணி எட்டுக்குமேல் ஆகிவிட்டது; ஒன்பதும் அடித்தது. அவ்வளவு நேரமாகியும் வரதன் காணப்படவில்லை. ஆனாலும், அக்கம்பக்கத்தார் அதன்பொருட்டுத் தத்தம் வேலைகளைக் கவனியாமல் இருப்பார்களா? அவர்களுள் அநேகர் அங்கிருந்து ஒவ்வொருவராக நழுவலாயினர்.

மணி ஒன்பதரை இருக்கலாம். அப்போது பெரியோரிற் பலர், தத்தம் வேலைகளுக்குச் சென்றுவிட்டனர். பெண்களிலும் சிலர் வருவதும் போவதுமாய் இருந்தனர். பாடசாலைக்குச் செல்லவேண்டிய பிள்ளைகளெல்லாம், தங்கள் புத்தகம் பலகைகளோடு வரதன் வீட்டுத் தெருவிலேயே சுற்றிக்கொண்டிருந்தனர்.

மணி பத்தடிக்கும் சமயம். ஆதலால், அங்குள்ள பிள்ளைகளில் பெரும்பாலோர் பாடசாலைக்குச் சென்றுவிட்டார்கள். கண்ணனும் முருகனும் அன்று பாடசாலைக்குச் செல்லவேயில்லை. அவ்வளவுதான? அவர்கள்

அதுவரையில் பல்லும் துலக்கவேயில்லை ; பச்சைத் தண்ணீரும் குடிக்கவில்லை. அவர்கள் அழுது அழுது உடல் இளைத்தனர் ; தேடித் தேடிக் காலும் இளைத்தனர்.

' அடே முருகா, வரதன் வராமலே போய்விட்டால்—நாம் என்னடா செய்வது ?' என்று மெலிந்த குரலோடு ஏங்கிய முகத்தினனைக் கேட்டான் கண்ணன்.

இதைக் கேட்டதும் முருகன் சிறிதுநேரம் திகைத்து நின்றான். பின்னர் அவன் கண்ணனைக் கோபத்தோடு நோக்கி, ' அடே, அப்படிச் சொன்னால் எனக்கு மிகவும் கோபம் வரும் !' என்றான்.

கண்ணன் அப்போது ஒன்றும் பேசவில்லை. சிறிது நேரம் கழித்து முருகன், ' சாமி—அப்பனே, எங்கள் வரதன் எப்படியாவது அகப்பட்டு விடவேண்டும் ;—ஆ! வினை தீர்த்த விநாயகரே,—எங்கள் பாடசாலைத் தெருவிலே உள்ள பிள்ளையாரே ! எங்கள் வரதன் இன்றைக்குள் வந்து விட்டால்—நான் உனக்குத் தேங்காய் உடைத்துக் கருப்பூரங்கொளுத்துவேன்' என்று பலப்பல சொல்லிக்கொண்டே தன் தாடையில் பளீர்—பளீர் என்று அறைந்துகொண்டான் ; தலையிலும் குட்டிக் கொண்டான்.

அப்போது கண்ணன், கண்ணீர் வடித்தவண்ணம் கடவுளை நோக்கி, ஏதோ 'மொண மொண' வென்று மனதிற்குள் துதித்துத் தானும் ஏதேதோ பிரார்த்தனைகள் செய்து கொண்டான்.

மணி பத்தடித்தது. அப்போது அங்கிருந்தோருள் ஒருவர், ' எங்கே தாமோதரப்பிள்ளை ?' என்றார்.

அதற்கு மற்ரெருவர், ' அதைத்தான் நானும் கேட்க இருந்தேன். அவர் நெடுநேரமாகக் காணும். ஐயோ! அவர், தம் மைந்தனைப் பிரிந்த சோகத்தால் எங்கேனும் ஓடிப்போய்விட்டாரோ! அல்லது குளத்தில் குட்டையில் விழுந்துவிட்டரோ!' என்று ஆத்திரத்துடன் கூறினர்.

அப்போது வேறெருவர், ஐயா, மெதுவாகப் பேசுங்கள். இதைக் கேட்டுவிட்டால் அவர் மனைவி தன் உயிரையே விட்டுவிடுவாள் ' என்றார்.

அவர்கள் இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும்போது, முருகனின் இளைய தமையனாகிய கந்தன் அங்கே வந்து நின்றான். அப்போது அவர்களுள் ஒருவர், கந்தா, எங்கே தாமோதரப்பிள்ளை ?' என்றார்.

அதற்குக் கந்தன், ' நான்கூட அவரைத்தான் தேடுகின்றேன். அடுத்தவீட்டுப் பெரியவரும், அவரும் வரதனைத் தேடிக்கொண்டு எங்கோ சென்றார்கள். அவர்கள் இதுவரையில் வரவில்லை. நேற்று இரவு சென்ற எங்கள் அண்ணாவும், அந்த ஆசிரியருங்கூட இவ்வளவு நேரமாகியும் வரவில்லை. எனக்கோ இன்னது செய்வதென்று தெரியவில்லை ' என்று கண்கலங்கிக் கூறினான்.

அப்போது அவர்களுள் ஒருவர், ' அப்பா கந்தா நீ அழவேண்டாம். அவர்கள் பெரியவர்கள்; எங்கே போய் விடுவார்கள் ? சிறிது நேரத்தில் எல்லோரும் வீடுவந்து சேருவார்கள். எங்களுக்கு வரதனைப்பற்றித்தான் கவலையாக இருக்கின்றது. போலீசார் என்ன சொல்லுகின்றார்கள் ? என்றார்.

அதற்குக் கந்தன், ' நான் இப்போதுகூடப் போலீசுக்குப் போய்த்தான் வருகின்றேன். அவர்களைக் கேட்

டால்,—நாங்கள் என்ன செய்வோம் ; அவன் அகப்பட்டால்தானே ?—என்கிருர்கள் ' என்ருன்.

' அப்படியா ? அதிருக்கட்டும் ; தந்தி கொடுத்தாயே அது என்ன ஆயிற்று !' என்ருர் அவர்களுள் மற்ருெருவர்.

' நான் இரண்டிடங்களுக்குத் தந்தி கொடுத்தேன். இதுவரையிலும் ஒரு பதிலும் வரவில்லை, என்று ஏக்கத்துடன் கூறிஞன் கந்தன்.

———

## 13. எங்கும் ஆரவாரம் !

அன்று வரதன் வீடு மிக்க அலங்கோலமாகவே இருந்தது. ஒருவரும் அவ்வீட்டைப் பெருக்கிக் கோலம் போட்டிலர் ; தெருவில் சாணமும் தெளித்திலர், செம்பு, தவலை முதலிய சாமான்கள்—போட்டவை போட்ட இடத்திலேயே கிடந்தன. தண்ணீர் ஊற்றிப் போகணியில் நிரப்பி வைத்திருந்த மல்லிகைமொட்டுகள் முடிப்போரின்றி ஒருபுறத்தே மலர்ந்து கிடந்தன. அவ்வாறே சமையலறையிலிருந்த சாமான்களும் தாறு மாருகக் கிடந்தன. அவ்வாறே சமையலறையிலிருந்த சாமான்களும் தாறு மாருகக் கிடந்தன் அடுப்பில் மூட்டிய கட்டைகள், தாமே எரிந்து கரிந்து சாம்பல் பூத்துச் சிறு சிறுகொள்ளிக் கட்டைகளாய்க் கிடந்தன. முன் நாள் ஏற்றிய விளக்கும், அணைப்பாரின்றி அன்று காலையிலும் எரிந்து கொண்டிருந்தது. வரதன் அன்னையோ அழுது அழுது

இளைத்துக் களைத்துத் தலைவிரிகோலமாய்க் கூடத்தில் விழுந்து கிடந்தாள். அவளைச் சுற்றி இரண்டு மூன்று கிழவிகளும், நாலைந்து இளம் பெண்களும், தம் முகவாய்க் கட்டையில் கையை வைத்து ஊன்றிக்கொண்டும், கடவுளை வேண்டிக்கொண்டும் இருந்தனர்.

தரையில் கிடந்த குமுதவல்லி, சிறிதுநேரம் பொறுத்து மெல்லக் கண்திறந்து பார்த்தாள். அப்போது, அங்குள்ள கிழவிகளுள் ஒருத்தி, 'அம்மா, நீ இப்படியே அழுதுகொண்டிருப்பதால் என்ன பயன்? எழுந்திரு; பல் துலக்கிக்கொண்டு ஏதேனும் சிறிது சாப்பிடு; உன் மகன் வருவான்; எங்கே போகின்றான்?' என்றாள்.

'மகன்' என்ற சொல்லைக் கேட்டதும், குமுதவல்லிக்கு மறுபடியும் அழுகையும் துக்கமும் வந்துவிட்டன. 'ஆ! என் மகனே—மகனே!' என்பாள்; 'நான் உன்னை எப்போதடா பார்க்கப்போகின்றேன்' என்பாள்; 'ஐயோ! என் உயிர் இன்னமும் போகவில்லையே' என்பாள்; அந்தப் பாவி எமன் எங்கே போய்விட்டான்?' என்பாள்; 'நேற்று இந்நேரம் பாடசாலைக்குச் சென்றாயே!' என்பாள்; 'நீ இல்லாமல் இவ்வீடு சந்தடியற்றுக் கிடக்கின்றதே!' என்பாள்; அயல்வீட்டுப் பிள்ளைகளைப் பார்த்துப் பார்த்து அழுவாள்; கைகளைத் தரையில் மோதுவாள்; 'கடவுளே, உனக்குக் கருணை யில்லையா?' என்பாள்; 'கோவிந்தா—கோபாலா, உன்னையே நம்பினேன்' என்பாள்; மறுபடியும் ஏங்கி இளைத்து நிலத்தில் விழுவாள்.

இவள் இவ்விதம் அழுதுகொண்டிருக்கும்போது தெருவில் யாதோ ஒரு வண்டிவரும் சத்தம் கேட்டது.

பிறகு, ஒரு பெரிய ஆரவாரமும் உண்டாயிற்று. அஃது இன்னதென்று அறிந்துகொள்ள அங்குள்ள பெண்களுள் ஒருத்தி விரைந்து வெளியே சென்றாள். தெருவில் ஒரு பெரிய இரட்டை மாட்டுவண்டி நிற்றலையும், பலர் அதனைச் சூழ்ந்து கொண்டிருத்தலையும் அவள் கண்டாள். 'இந்த வண்டி இங்கு வந்து நிற்பதற்குக் காரணம் என்ன?' என்று அந்தப்பெண் மிக்க ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டிருக்கும்போது, அவ்வண்டியிலிருந்து அடுத்த வீட்டுப் பெரியவர் மெதுவாக இறங்கினார்; பின்னர், தாமோதரப்பிள்ளையும் இறங்கினார். அதே சமயத்தில் முருகன் தமையனாகிய சுந்தரனும் அவ்வண்டியின் முன் பக்கமாக வந்து கீழே குதித்தான். அப்போது, அவன் முகம் சுந்தரமாகவே விளங்கியது. சுந்தரனைக் கண்டதும் அங்குள்ள எல்லோரும், 'வரதன் எங்கே-எங்கே ?' என்று கூவினார்கள். அபபோது, வரதன் அவ்வண்டியி லிருந்து எட்டிப்பார்த்தான். சுந்தரன் அச்சிறுவனைத் தூக்கிக் கீழே விட்டான். பின்னர்த் தலைமை ஆசிரி யரும் அவ்வண்டியை விட்டுக் கீழே இறங்கினார்.

அந்தப்பெண்மணி வரதனைக் கண்டதும், 'வரதன் வந்து விட்டான்—வரதன் வந்து விட்டான்' என்று கூவிக்கொண்டே வீட்டிற்குள் ஓடினாள். இதைக் கேட்டதும் கண்ணனும் முருகனும் மிக்க ஆனந்தத் தோடு வரதனைக் காண ஓடினார். 'வரதன் வந்து விட்டான்' என்னும் சொல் குமுதவல்லியின் செவியில் நுழைந்ததும், மங்கி மாசுற்று இருந்த அவள் கண்கள் ஒளிகொண்டு விளங்கின; துன்பத்தால் வாடி வெளுத் துத் தோன்றிய அவள் முகம் இன்பத்தால் பூரித்து அழகுற்று ஒளிர்ந்தது. அவள் மிக்க அவசரத்துடன்,

அவிழ்ந்து கிடந்த தன் கூந்தலைக் கோதி முடியிட்டுக் கொண்டு, ''என் மகன்—எங்கே? என் செல்வன் எங்கே?' என்று சொல்லிக்கொண்டே விரைந்தெழுந்து தெருவிற்கு ஓடிவந்தாள்.

வரதனைக் கண்டதும் அவள், அவனை வாரி எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டாள்; அவனிடம் கொஞ்சிக் குலாவினாள்; அவனுக்கு முத்தம் பல தந்தாள்; 'என் கண்ணே, என் கிளியே, என் செல்வமே, நீ இத்துணை நேரம் எங்கேயடா சென்றிருந்தாய்?' என்றாள்; 'உன் அன்னை பெரிதும் வருந்துவாள் என்பது உனக்குத் தெரியாதா?' என்றாள்; 'எந்தத் தெய்வமோ உன்னை இங்கே மறுபடியும் கொண்டுவந்து விட்டதே!' என்றாள்; நீர் வடிந்திருந்த அவன் கண்களைத் துடைத்தாள்; முன் வந்து தொங்கிக்கொண்டிருந்த அவன் தலைமயிரைக் கோதினாள்;—'ஆ! வரதா, எங்கே உன் காதிலிருந்த குண்டலங்கள்!' என்றாள்; அப்போது, வரதன் பேசுதற்கு வாயெழாமல், தேம்பித்தேம்பி அழுதான். பின்னர் அவள், வரதன் கைகளிலும் கால்களிலும் இருந்த ஆபரணங்கள் பலவும் காணாமைக்குப் பெரிதும் வருந்தினாள். பிறகு அவள், தன்னைத்தானே தேற்றிக்கொண்டு, 'என் கண்ணே, நீ அவைகளின் பொருட்டு வருந்த வேண்டாம். நீ எப்படியோ உயிர்பெற்று வந்தனையே! அதுபோதும்' என்று சொல்லி அவனுக்கு மறுபடியும் முத்தம் தந்தாள்; முடிவில் அவனை வீட்டிற்குள் அழைத்துச் சென்றாள்.

குமுதவல்லி, உள்ளே சென்றதும், கூடத்தில் மணையிட்டு வரதனை, அதன்மேல் உட்காரவைத்தாள்; அவனுக்கு இருபுறமும் இரண்டு குத்துவிளக்குகளை

ஏற்றிவைத்தாள். பிறகு ஒரு தாமிரத்தட்டில் தண்ணீ ரூற்றி, அதில் அரைத்த மஞ்சளும், சுண்ணமும் கலந்தாள்; ஒரு வெற்றிலையை அத்தட்டின் இடையே வைத்தாள்; அதன்மேல் ஒரு பெரிய கரும்பூரக் கட்டியை ஏற்றி வைத்து அவனுக்கு ஆரத்தி எடுத்தாள். அப்போது, கண்ணனும் முருகனும், வரதன் பக்கத்தில் உட்கார்ந்து, தாங்களும் திருஷ்டி கழித்துக்கொண்டனர்.

பிறகு, அங்கிருந்த பெண்களில் ஒருத்தி, வரத னுக்கு அருகே வந்து, 'அப்பா, எங்கள் வயிற்றில் பாலைவார்த்தாயே ?' என்று சொல்லித் தன் இரண்டு கைகளாலும் அவன் தாடையைத் தடவித் தடவித் தன் கன்னத்தில் வைத்து நட்டை யுடைத்துக் கொண் டாள்.

'மகனே! உனக்காக நாங்கள் எத்தனைத் தெய் வங்களை வேண்டிக்கொண்டோம்' என்றாள் மற் றொருத்தி.

குமுதவல்லிக்கு அப்போதுதான் மனம் குளிர்ந்தது; அவளும் வீட்டு வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்தாள். கண்ணனும் முருகனும் வரதனிடம் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

கந்தன், சுந்தரன், தாமோதரப்பிள்ளை முதலியவர் கள் தெருத்திண்ணையில் அமர்ந்து தலைமை ஆசிரியரது நற்குணத்தினை விளக்குதற்குப் பலப்பல சம்பவங்களைச் சொல்லிக்கொண்டிருந்தனர்.

வரதன் வீடுவந்து சேர்ந்ததைப் பிள்ளைகள் எவ் விதமோ அறிந்துகொண்டனர். ஆதலால், அவர்கள் அப்போதே சென்று வரதனைக் காண விரும்பினர்;

சிறிதுநேரத்தில் தலைமை ஆசிரியர் அங்கே வந்தனர். அவர், அப்பிள்ளைகள் எண்ணத்தை அறிந்து அவர்களுக்கு ஒருமணி நேரம் ஒழிவு கொடுத்தனர். உடனே பிள்ளைகள் அனைவரும் 'ஓ' வென்று கூவிக்கொண்டு, 'நான் முன்-நான்முன்' என்று ஒருவரை யொருவர் தள்ளிக் கொண்டு வெளியே வர முயன்றனர். அதனால் சிலர் இடறி விழுந்து வருந்தினர்; சிலர் பலகை புத்தகங்களைக் கொட்டி வாரினர்; சிலர் உதைபட்டும், இடிபட்டும், குத்துண்டும், மொத்துண்டும் வெளியே வந்து சேர்ந்தனர். பின்னர் அவர்கள், வரதன் வீட்டிற்கு விரைந்து ஓடினர். அங்கே வந்ததும், அவர்களில் சிலர் துள்ளித் துள்ளிக் குதித்தனர்; சிலர் அங்கும் இங்குமாகத் தாவியோடினர்; சிலர், தம் தலையிலிருந்த தொப்பியைத் தூக்கிப்போட்டுப் பிடித்தனர்; சிலர் 'வரதா—வரதா,' என்று வெளியே நின்று அழைத்தனர்.

வரதன் வீட்டிலிருந்து வெளியே வந்தான். அப்போது அவனுக்கு அத்தெரு, தேருந் திருவிழாவுமாய்க் காணப்பட்டது. பாடசாலைப் பிள்ளைகளில் சிலர், வரதனை நன்றாகக் காணவேண்டி அவன் வீட்டுத் திண்ணை, குறடு முதலியவைகளின் மீது ஏறிக்கொண்டனர்; சிலர் எதிர்வீட்டுத் திண்ணைகளின் மீதும் ஏறிக்கொண்டனர்; மற்றும் பலர், அத்தெருவில் கூட்டம் கூட்டமாக நின்றனர்.

அப்போது அவர்களில் ஒருவன், 'ஆ! வரதா, நீ எப்போது வந்தாய்?' என வினவினான்.

மற்றொருவன், 'அடே வரதா, நீ நேற்று இரவெல்லாம் எங்கே யிருந்தாய்!' என்றான்.

வேறொருவன், 'வரதா! உன் நகைகள் எங்கே?' என வினவினான்.

'ஆ' நீ இப்படியும் செய்யலாமா?' என்றான் கோதண்டன்.

'வரதா, உனக்காக நாங்கள் எங்கெங்கே சென்று தேடினோம்! தெரியுமா?' என்றான் கோபாலன்.

வரதன், தன் நண்பர்களைக் கண்டதும் மிகுதியும் ஆனந்தித்தான்; அவர்களோடு சிறிது பேசுதற்கும் எண்ணினான். ஆனால், அவர்கள் ஒவ்வொருவரும் அவனைப் பலப்பல கேட்ட வண்ணம் இருந்ததால், யாருக்கு என்ன விடையளிப்பதெனத் தோன்றாமல் வரதன் விழித்தான்.

## 14. வரதனைக்கண்டறிந்த வரலாறு

சிறிது நேரம் கழிந்தது; அப்பொழுது தலைமை ஆசிரியரும், பிற ஆசிரியர்களும் அங்கே வந்தனர். அவர்களைக் கண்டதும் பிள்ளைகளின் ஆரவாரம் சிறிது சிறிதாக அடங்கியது. பின்னர் அவர்கள், ஒவ்வொருவராக அவ்விடத்தினை விட்டு நழுவலாயினர். அப்போது, தெருவில் நின்றுகொண்டிருந்த தாமோதரப் பிள்ளை, அடுத்த வீட்டுப் பெரியவரைப் பார்த்து, 'ஆ! கடவுள் செயலால், எப்படியோ அகப்பட்டான் வரதன்! அவனுக்காக நடந்து நடந்து—அப்பப்பா! என் காலும் நோகின்றது' என்று சொல்லிக்கொண்டே தம் வீட்டுத் திண்ணையின் மேல் உட்கார்ந்தார்.

அதற்கு அப்பெரியவர், 'ஐயா தெரிகின்றதா? இது தான் பிள்ளைகளைப் பெற்று நாம் அடைகின்ற சுகம்' என்றார்.

உடனே அங்கிருந்த எதிர்வீட்டுக்காரர், அவர்களைப் பார்த்து, 'ஐயா, நீங்கள் இருவரும் இங்கே இருந்தீர்களே! பிறகு திடீரென்று எங்கே சென்றீர்கள்? வரதனை எவ்விதம் கண்டுபிடித்தீர்கள்?' என்று கேட்டார்.

அதற்கு அப்பெரியவர், 'நாங்களா கண்டுபிடித்தோம்? இந்தச் சுந்தரனும் இவ்வுபாத்தியாயருமே கண்டு பிடித்தார்கள். நாங்கள் இருவரும் இன்று அதிகாலையில் புறப்பட்டுத் தெருத் தெருவாய்ச் சுற்றி யலைந்தோம். வரதன் அகப்படவே இல்லை. ஆதலால் நாங்கள், அவனைக் குறித்தே ஏதேதோ பேசிக்கொண்டே வடமேற்காக நீள நடந்து சென்றோம். இவ்விதம் நாங்கள், வியாசர்பாடிக்கு அருகே செல்லும்போது எங்களுக்கு எதிராக ஒரு வண்டி வேகமாக வந்துகொண்டிருந்தது. முதலில், நாங்கள் அதனைக் கவனியாமலேயே சென்று கொண்டிருந்தோம். ஆனால், அந்த வண்டி எங்களுக்கு அருகே வந்ததும் நின்றுவிட்டது. பிறகு, சுந்தரனின் குரல் எங்களுக்குக் கேட்டது. அதனால் நாங்கள் அந்த வண்டியை அடைந்தோம். அங்கே சுந்தரனையும், வரதனையும், நம் உபாத்தியாயரையும் கண்டோம்' என்றார்.

அப்போது அவ்வீட்டுக்காரர், 'ஓ! அப்படியா!—தம்பி சுந்தரம், நீங்கள் எவ்வாறு வரதனைக்கண்டுபிடித்தீர்கள்?' என்று ஆவலுடன் வினவினார்.

அதற்குச் சுந்தரன், "அதுவும் தெய்வச் செயல் என்றுதான் சொல்லவேண்டும். நானும் ஆசிரியரும்

எவ்விதமேனும் வரதனைக் கண்டுபிடிக்கவேண்டும் என்றே புறப்பட்டோம். ஆனால் முதலில் எங்கே செல்வதென்று எங்களுக்குத் தெரியவில்லை. நான் 'மயிலாப்பூர் வழியே போகலாம்' என்றேன். நம் ஆசிரியர் 'திருவொற்றியூர் வழியாகப் போகலாம்' என்றார். பிறகு எவ்விதமோ—பேசிக்கொண்டே மூலைக்கொத்தளம் வரையில் சென்றோம். சிறிதுநேரத்திற்கெல்லாம் நம் ஆசிரியர், 'சுந்தரம் நாம் எங்கே போகிறோம்? இது மூலைக் கொத்தளம் அல்லவா?' என்றார். அதற்கு நான் 'ஆம்; வாருங்கள், திரும்பிச் செல்லலாம்' என்றேன்.

'ஆதலால், நாங்கள் இருவரும் திரும்பிச் சிறிது தூரம் வந்தோம். அங்கே ஒரு கிழவன் 'மினுக்கு-மினுக்' கென்று ஒரு விளக்கை வைத்துக் கொண்டு, வெற்றிலைப் பாக்கும், கடலை பட்டாணியும் விற்றுக் கொண்டிருந்தான். நம் ஆசிரியர் அங்கே சென்று, 'இந்த வழியாக யாரேனும் ஒரு சிறுவன் அழுது கொண்டே சென்றானா?' என்று அவனைக் கேட்டார். அவன் முதலில் எங்களுக்குச் சரியாகவே பதில் சொல்லவில்லை. 'எனக்கு இதுதானா வேலை? இதுவரையில் எத்தனையோ பேர் போய்க்கொண்டும் வந்துகொண்டும் இருக்கிறார்கள்' என்றான். பிறகு நம் ஆசிரியர், அவனிடம் ஒரு காலணா கொடுத்து வெற்றிலைப் பாக்கு வாங்கினார்; அவர் அதனை மடித்துப் போட்டுக் கொண்டே வரதன் அங்க அடையாளங்களையும், அவன் வீட்டார் அவனைக் குறித்து வருந்துதலையும் அக் கிழவனிடம் சிறிது சிறிதாகச் சொல்லிக் கொண்டே வந்தார். அப்போது அக்கிழவனுக்குச் சிறிது இரக்கமும் பிறந்தது. அவன், 'அப்படியா! ஐயோ பாவம்! சாமி, நான் காலை

யிலிருந்து இதுவரையில் இங்கே தான் உட்கார்ந்து கொண்டிருக்கின்றேன். நீங்கள் சொல்லுகிறபடி நான் ஒரு சிறுவனையும் பார்க்கவில்லை' என்றான். பிறகு அவன் ஏதோ யோசித்து, 'சாமி, அவன் என்ன சட்டை போட்டுக்கொண் டிருந்தான் ?' என்றான். அப்போது, ஆசிரியர் என்னைப் பார்த்தார். வரதன் அன்று என்ன சட்டை போட்டுக்கொண்டு போனானென்று எனக்குத் தெரியாது. ஆதலால், நான் பேசாமல் இருந் தேன். பிறகு ஆசிரியர் சிறிது நேரம் யோசித்து, 'வெள்ளைச் சட்டை' என்றார். பிறகு, அவன் 'அவ னுக்கு என்ன வயது இருக்கும் ? சுமார் ஏழு அல்லது எட்டு இருக்குமா ?' என்றான். அதற்கு அவர், 'ஆம் ; சரியாக ஏழே இருக்கும்' என்றார். 'அப்படியானால், அந்தச் சட்டை போட்ட ஒரு பையனும் ஒரு பிள்ளையாண் டானும் இந்த வழியாகப் போனார்கள்' என்றான். 'அப் போது என்ன மணி யிருக்கும் ? சரியாகச் சொல்ல முடி யுமா ?' என்று ஆசிரியர் கேட்டார். அதற்கு அக் கிழவன், 'என்ன சாமி, நான் கெடியாரமா (கடிகாரம்) வைத்திருக்கின்றேன். அவர்கள் போய் ரொம்ப (நிரம்ப) நேரமாகிறது. நான் அப்போது விளக்கு ஏற்றவில்லை. ஏறத்தாழ ஆறு மணி யிருக்கலாம்' என்றான். நான் அப்போது, 'அவன் காதில் என்ன போட்டுக்கொண் டிருந்தான் ?, என்றேன். அதற்கு அவன், அதையெல் லாம் யார் பார்த்தார்கள் ? அந்தப் பையன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே போனான்' என்றான் ; உடனே நம் ஆசிரியர், 'அவன் புத்தகம் பலகை வைத்துக்கொண் டிருந்தானா ?' என்றார். அதற்கு அவன், 'என்னமோ ? இருக்கலாம்—நான் கவனிக்க

வில்லை' என்றான். பிறகு நம் ஆசிரியர், 'ஐயா, அந்தச் சிறுவனோடு போன பிள்ளையாண்டானுக்கு என்ன வயதிருக்கும்?' என்றார். அதற்கு அக்கிழவன், 'அது எனக்குத் தெரியாது. இதோ உங்கள் பக்கத்தில் இருக்கின்றாரே ஐயா—அவரைவிடக் கொஞ்சம் பெரியவராக இருக்கலாம்' என்றான்; பிறகு, நம் ஆசிரியர் சிறிது நேரம் ஏதோ யோசித்து முடிவில் என்னைப் பார்த்து, 'சுந்தரம், அந்தச் சிறுவன் வரதனாகத்தான் இருக்கவேண்டும்; அந்த வழியே போய்ப் பார்க்கலாமா' என்றார்.

"ஆதலால் நாங்கள் இருவரும் மிக வேகமாக வடமேற்குத் திசை நோக்கிச் சென்றோம். நாங்கள் இவ்விதம் சிறிது தூரம் சென்றதும் வியாசர்பாடியை அடைந்தோம். அப்போது இரவு மணி, பன்னிரண்டு அடிக்கும் சமயம் ஆதலால், அங்கே எல்லா வீடுகளும் அடைபட்டிருந்தன. நாங்கள் இருவரும் இன்னது செய்வதென்று தோன்றாமல் சிறிது நேரம் திகைத்துப் பின்னர், அங்குள்ள ஒரு வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினோம். நெடுநேரஞ் சென்ற பின்னர், ஒருவர் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். நாங்கள் அவரிடம் வரதன் விஷயத்தைக் கூறியதும் அவர் முணுமுணுத்துக் கொண்டு, 'அது என்னமோ எனக்குத் தெரியாது—இங்கே ஒருவரும் வரவில்லை' என்று சொல்லிக் கொண்டே கதவைத் தாளிட்டுக் கொண்டு சென்றுவிட்டார்.

"பின்னர், நாங்கள் இரண்டு மூன்று வீடுகள் தாண்டிச் சென்றோம். அங்கே ஒரு பெரியவர் சுருட்டுப் பிடித்துக்கொண்டு வெளியே உலாவிக் கொண்டிருந்தார்.

அவர் நாங்கள் கூறியதை நிதானமாகக் கேட்டுப் பிறகு, 'இங்கே எந்தச் சிறுவனும் வரவில்லை; இதுவோ சிறிய ஊர்; யார் வந்தாலும் எங்களுக்குத் தெரியும்;—பட்டணத்தில் பிள்ளைகள் காணுமற் போய்விடுகிருர்கள்—என்று நானும் அடிக்கடி கேள்விப்படுகிறேன். அப்படிச் சிறுவர்களை மயக்கி இழுத்துக் கொண்டு போகும் மோசக்காரர்கள் பெரும்பாலும் ஊருக்குள் வரமாட்டார்கள்; எங்கோ—தோட்டம் துரவுகளுக்கு அழைத்துச் சென்று, தங்களுக்கு வேண்டிய நகைகளைப் பிடுங்கிக் கொண்டு அச்சிறுவர்களை அங்கேயே கழுத்தை முறித்துப் போட்டுவிடுவார்கள்; அல்லது உயிரோடு விட்டுப் போவதும் உண்டு. சுமார் ஆறு மாதத்திற்கு முன்பு கூட, இந்த ஊருக்கு அருகிலேயே அப்படி ஒன்று நடந்ததாக நான் கேள்விப்பட்டேன்' என்ருர்.

" அப்போது ஆசிரியர், என் முகத்தைப் பார்த்தார்; நானும் அவர் முகத்தைப் பார்த்தேன். பிறகு நம் ஆசிரியர், 'எங்கள் சிறுவனை, அவ்விதம் அழைத்துச் சென்றதை இந்த ஊரார் யாரேனும் பார்த்திருக்கலாமே என்பது என் எண்ணம்' என்ருர். 'அது பொழுது விடிந்தால் தான் தெரியும்; இந்த இரவில் யாரைக் கேட்பது? நீங்களும் சந்தேகமாகத்தான் சொல்லுகின்றீர்கள். எதற்கும்—அதோ தெரிகின்றதே!—அந்தத் தோட்டம்—அதற்குப் பக்கத்தில் இருக்கும் ஏரிகரை—முதலிய இடங்களில் சென்று பார்க்க வேண்டும். இப்போதோ நல்ல நிலவு இல்லை. அதுவும் மறையும் சமயமாக இருக்கிறது. அங்கே பூச்சிப் புழுக்கள் இருக்கும்' என்ருர் பெரியவர்.

"அதற்கு ஆசிரியர், 'நாங்கள் போய்ச் சுற்றிப் பார்த்து வருகின்றோம்' என்று சொல்லிக் கொண்டே என்னையும் அழைத்துக் கொண்டு அங்கேயுள்ள தோட்டம் துரவுகளைத் தேடிக்கொண்டே ஏரிகரையின் பக்கம் வந்தார். அங்கே, ஒரு சிறு குடிசையின் அருகே, சுமார் நாற்பது வயதுள்ள ஓர் ஏழைப் பெண், வாயில் புகையிலை போட்டுக் கொண்டே, தன் கணவனிடம் ஏதோ பேசிக்கொண்டு இருந்தாள். அவள் எங்களைப் பார்த்ததும், 'நீங்கள் யார் ஐயா ?' என்றாள். அப்போது ஆசிரியர், எல்லா விஷயங்களையும் அவளுக்குக் கூறி, 'அம்மா நீ எங்கள் வரதனை எங்கேயேனும் பார்த்தாயா ?' என்றார். அதற்கு அவள், 'ஐயா, நான் உங்கள் பையனைப் பார்க்கவேயில்லை ; நான் **புழல்-மாதவரத்தி**லிருந்து கொஞ்ச நேரத்திற்கு முன்னேதான் வந்தேன் ; வரும்போது வழியில் நாலைந்துபேர் நின்றுகொண்டு, ஏதோ, பையன்—பையன் என்று சொல்லிக் கொண்டு இருந்தார்கள். ஒரு பையன் கூட அங்கே நின்று அழுது கொண்டு இருந்தான்' என்றாள். அப்போது நான், 'அப்படியா ! அம்மா, அவன் கறுப்பா ? சிவப்பா ? அவன் என்ன சட்டை போட்டுக் கொண்டிருந்தான் ? காதிலே ஏதேனும் போட்டுக் கொண்டிருந்தானா ?' என்றேன். அதற்கு அவள் 'அவைகளையெல்லாம் நான் கண்டேனா ? பையன் சின்னவனாய் இருந்தான் ; ஏதோ நகைகள்கூடக் காணோம் என்று பேசிக்கொண்டிருந்தார்கள்' என்றாள்.

"அப்போது ஆசிரியர், 'அவன் வரதனாகத்தான் இருக்கவேண்டும் ; சுந்தரம், வா ; போகலாம்' என்றார். நாங்கள் இருவரும் அப்போதே மாதவரம்

வழி நோக்கிச் சென்றோம். அப்போது, மணி ஒன்றுக்கு மேல் இருக்கும். எங்கும் ஒரே இருட்டாக இருந்தது. வழியில் மக்கள் நடமாட்டம் சிறிதும் இல்லை. அப்போது, வண்டிகள் கூடச் செல்லவில்லை. அவ்வீதியின் இருபுறங்களிலும் வீடேனும் வாயிலேனும் காணப்படவில்லை. எங்கும் மரங்களும் மைதானங்களுமே காணப்பட்டன. அப்போது, எனக்குச் சிறிது அச்சமாகவே யிருந்தது. எனக்குப் பேய் பிசாசுகளின் மீது நம்பிக்கையில்லை யென்றாலும் தேள், பாம்பு, நண்டுத்தெறுக்கால் முதலியவைகளுக்காகப் பயப்படவேண்டுமே. நம் ஆசிரியரும் அப்போது, 'நாம் கையில் ஒரு விளக்கும் தடியும் எடுத்து வந்திருக்க வேண்டும்' என்றார்.

இவ்விதம் நாங்கள் நெடுந்தூரம் சென்றோம். மணி சுமார் மூன்றிருக்கலாம். அப்போது, தயிர்ப் பானையைத் தலைமேல் வைத்துக்கொண்டு எங்களுக்கு எதிராகச் சிலர் வந்தார்கள். அவர்களைப் பார்த்ததும் நாங்கள், 'ஐயா, புழல் மாதவரம் இன்னும் எவ்வளவு தூரம் இருக்கின்றது ?' என்று கேட்டோம். அதற்கு அவர்கள், 'ஐயா, மாதவரம் இன்னும் கொஞ்சம் தூரத்தில்தான் இருக்கிறது; அதற்கப்பால் போனால் புழல் கிராமம்' என்றார்கள். நம் ஆசிரியர் வரதனைக் குறித்து அவர்களைக் கேட்டார்; அவர்களுக்கு அவனைப்பற்றி யொன்றும் தெரியவில்லை.

''ஆதலால் நாங்கள் மேலும் சிறிது தூரம் சென்று மாதவரத்தை அடைந்தோம். மாதவரம் பெரிய கிராமமன்று; அங்குப் பெரும்பாலும் குடிசைகளே காணப்பட்டன. ஆதலால், அங்குள்ளோர் அனைவரும் ஏழைகளே. நாங்கள் அங்குச் சென்றபோது மணி நான்கடிக்

கும் சமயமாய் இருந்ததால், அவர்களுள் அநேகர் அப் பொழுது விழித்துக் கொண்டனர். நம் ஆசிரியர், அவர்களுள் இரண்டொருவரிடம் வரதனைக் குறித்து விசாரித்தார். அவற்கு அவர்களில் ஒருவன், சுமார் இரவு பத்துமணிக்கு அந்த வீதியில் ஓர் இருண்ட இடத்தில், ஒரு வாலிபன், பட்டணத்திலிருந்து ஒரு சிறுவனை எவ்வி தமோ அழைத்து வந்து, அவன் அணிந்திருந்த நகை களைக் கழற்றிக் கொண்டு, அவனைக் கொல்லவும் முயன்றதாகவும், அப்போது புழல் கிராமத்திலுள்ள இரண்டு பெரியோர்கள் அவ்வழியே வந்ததாகவும், அவர் களைக் கண்டு அவ்வாலிபன் எங்கோ ஓடிவிட்டதாக வும், ஆதலால் அவர்கள், அச்சிறுவனைத் தாங்கள் வீட் டுக்கு அழைத்துச் சென்றதாகவும் கூறினன்.

"இதைக் கேட்டதும் நாங்கள் திடுக்கிட்டோம். அச் சிறுவனது அங்க அடையாளங்களை விசாரித்த போது, அவன் வரதனே என்பதை நாங்கள் நன்ருக அறிந்துகொண்டு அப்போதே புழல் கிராமத்திற்குச் சென் ரேம். அங்கே சென்றதும் நாங்கள், அங்குள்ளோரின் உதவியால் வரதன் தங்கியிருந்த வீட்டை யடைந்தோம். வரதன், அப்போது நல்ல நித்திரையில் இருந்தான். வீட் டிற்குடையவர், அச்சிறுவன் மிகவும் களைத்திருக்கின் ருன் என்றும், அவன் இன்னும் சிறிது நேரம் உறங்குதல் நலம் எனவும் கூறினர்.

"ஆதலால் நாங்கள் அங்கிருந்து வண்டி கட்டிக் கொண்டு புறப்படுவதற்கு மணி ஏறக்குறைய எட்டாகி விட்டது. நாங்கள் அவ்விதம் புறப்பட்டு வியாசர்பாடிக்கு அருகே வரும்போதுதான் மாமாவையும், அண்டை வீட் டுத் தாத்தாவையும் கண்டோம்" என்று சுந்தரன்,

தாமோதரப்பிள்ளையையும் அடுத்த வீட்டுப் பெரியவரை யும் சுட்டிக் காட்டிக் கூறினன்.

---

## 15. முடிபு

சுந்தரன் இவ்வாறு சொல்லிக்கொண் டிருக்கும் போது வரதன், அவன் தாய், கண்ணன், முருகன் முதலிய அனைவரும் அங்கே நின்றிருந்தனர். பின்னர் வரதன், தான் வழிதப்ப நேர்ந்த விதத்தினையும், அவ்வாலிபன் தன்னை ஏமாற்றி அழைத்துச் சென்றதையும், தனக்கு மயக்கங் கொடுத்துத் தன் நகைகளைக் கழற்றிக்கொண்டதையும், தான் அவைகளைக் கேட்டதற்கு, அவன் தன்னைக் கத்தியால் குத்த முயன்றதையும், அப்போது அவ்வூரார் வந்து தன்னைக் காப்பாற்றியதையும் விளக்கமாகக் கூறினன். தலைமை உபாத்தியாயரும், பிற ஆசிரியர்களும் அவனுக்கு அப்போது பல நன்மதி கூறினர். வரதன் தாய் தந்தையர், தலைமை ஆசிரியரின் சிரமத்திற்காக அவருக்கு நன்றி தெரிவித்தனர்.

பின்னர், அவ்வாசிரியர் முதல் அனைவரும் சென்று விட்டனர். கண்ணன் முருகன், சுந்தரன், கந்தன் இவர்கள் அன்று வரதன் வீட்டிலேயே உணவு கொள்ளலாயினர். பகலுணவு முடிந்ததும், இவர்கள் அங்கேயே நெடுநேரம் பேசிக்கொண் டிருந்தனர். தாமோதரப் பிள்ளை, சுந்தரன், கந்தன் முதலியவரின் குணத்தினைக் குறித்துப் புகழ்ந்து பேசினர். பிறகு அவர், தம் தொழிற்சாலைக்குச் சென்று விட்டார். கந்தனும், சுந்தரனும் குமுதவல்லியினிடம் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தனர்.

சுந்தரன்—மாமி. 'வரதனுக்கு நகைகள் போட வேண்டாம்' என்று நான் அப்போதே சொல்லவில்லையா? அதனால்தானே இவ்வளவு துன்பமும் வந்தது?

குமுதவல்லி—அது உண்மையே; 'இப்படியெல்லாம் படவேண்டும்' என்று வினை இருக்கின்றதே! அது வந்துதானே தீரும்?

கந்தன்—மாமி, நீங்கள் எல்லாவற்றிற்கும் 'வினை—வினை' என்று சொல்லிவிடுங்கள். நாளைக்கு வரதனை, 'நீ ஏன் படிக்கவில்லை' என்றால், அதற்கு அவனும், 'அது என் வினை' என்று சொல்லட்டும்.

இப்படி இவர்கள் நெடுநேரம் ஏதேதோ விளையாட்டாகப் பேசிக்கொண் டிருந்தனர். பிறகு, அவரவர் வீடு போய்ச் சேர்ந்தார்கள். கண்ணனும், தன் வீடுபோய்ச் சேர்ந்தான். வரதன் வீட்டுக்கு அன்று வருவார் போவார் மிகுதியும் இருந்தனர். வரதன் காணப்படவில்லை எனத் தந்தி சென்றதால் செங்கற்பட்டிலிருந்த வரதனின் மாமன், மாமி முதலியவர்களும், பெங்களூரிலிருந்த அவன் சிறிய தந்தையுங் கூட வந்துவிட்டனர். ஆதலால், அன்று வரதன் வீடு ஒரு பண்டிகை நாள் போன்றே காணப்பட்டது.

மறுநாள் வரதனும் முருகனும் பழக்கம்போல் பாடசாலைக்குச் செல்லலாயினர். அன்று, வரதன் ஓர் ஆபரணமும் அணிந்திராததைக் கண்டு பாடசாலைச் சிறுவர்கள் முதலில் வருத்தமே அடைந்தனர்.

பின்னர், அவர்களுள் ஒருவன், 'அடே வரதா, இப்போது உன் முகத்தில் களையே இல்லை' என்றான்.

உடனே முருகன், 'ஆண்பிள்ளைகளுக்கு ஆபரணம் ஏன்?' என்றான்.

ஆம்; இப்பொழுதுதான் வரதன் ஆண்பிள்ளை போல் இருக்கிறான்' என்றான் கண்ணன்.

இவ்விதம் அவர்கள் அன்று இன்பமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

'பலநாள் திருடன் ஒருநாளில் அகப்படுவான்' அல்லவா? திருடியே பிழைத்துவந்த தாண்டவனும் ஒருநாள் போலீசாரிடம் அகப்பட்டுக்கொண்டான். ஆதலால் அவன், சிறைச்சாலை சேர்ந்து நெடுநாள் துன்புறவேண்டி வந்தது.

வரதன், கண்ணன், முருகன் இம் மூவரும் என்றும் பிரியாத் தோழர்களாகவே யிருந்தனர். வரதன் நாளடைவில் பராக்குப் பார்ப்பதை முற்றிலும் ஒழித்து விட்டான். ஆதலால் அவன், கல்வியில் நாளுக்குநாள் சிறந்தோங்கினான். தன் பிள்ளை நன்றாகப் படிப்பதை அறிந்து அவன் தாய்தந்தையர் மிகுதியும் களிப்பெய்தினர்.

வரதன், தன் தந்தை விரும்பிய வண்ணமே பீ. ஏ., எம். ஏ,, முதலிய பரீட்சைகளில் தேறிப் பேரும் புகழும் பெற்றதோடு ஓர் அழகான பெண்மணியினையும் திருமணம் செய்துகொண்டு குழந்தை குட்டிகளோடு இன்னும் இனிதே வாழ்ந்து வருகின்றான்.

'அவன் யார்? அவன் எங்கே இருக்கின்றான்' என்று இதை வாசிக்கும் நீங்கள் கேட்கலாம். ஒருவன் பெயரைச் சொன்னாலும் அவன் ஊரைச் சொல்லுதல் கூடாதல்லவா?—வணக்கம்; வாழ்த்து.

முற்றிற்று.

## மாணவர் மன்றப் புதிய வெளியீடுகள்

1. நாலடியார் மூலம்
   (அரும்பதவுரையுடன்) 0 50
2. பழமொழி நானூறு மூலம்
   (அரும்பதவுரையுடன்) 0 50

—பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்கள் எழுதியன

3. நாராயணன்
   (இளைஞர்க் கேற்ற சிறுகதை) 1 0
4. தங்க நாணயம் ( ,, ) 0 60
5. வரதன் அல்லது வழிதப்பிய சிறுவன் 1 0
6. நல்ல எறும்பு
   (குழந்தைகட்கேற்ற சிறுகதை) 0 50
7. நல்ல குழந்தை ( ,, ) 0 50
8. கௌதமபுத்தர் (நாடகம்) 1 75

—புலவர் கோ. வில்வபதி.

9. சிறுவர் நாடகவிருந்து 1 50

—புலவர் தணிகை. உலகநாதன்.